# தித்திக்கும் முத்துக்கள்

(திருக்குறள்)

# DELICIOUS PEARLS

(SACRED KURRAL)






வெளியீடு :

திருக்குறள் பேரவை, தஞ்சை.

# பாவேந்தர் பாரதிதாசனார்
# நூற்றாண்டு விழா நினைவு வெளியீடு



சிலையாகி வாழுப்பா வேந்தே! எம் நெஞ்சில்
நிலையாக வாழ்வீர் நிறைந்து.

**Thou idolised and art living, O'King of poets**
**Thou excellently existeth in our lovely hearts.**

---

## AN APPEAL TO FOREIGNERS

Dear Friends,

You are not a foreigner to us. You are our kith and kin.

It is a fact that one of our ancestors had written some 2,000 years ago as follows: "Every city is our home-town; Everyone is our kinsman."

In case, you are interested in going through the full text of the Great "Thirukkural", we shall be pleased to supply you the text with the English translation.

In the propagation of this "Universal Sacred Scripture" and its great message, if you wish, you can join us.

Our good wishes to all of you.

---

# தித்திக்கும் முத்துக்கள்

( திருக்குறள் )

# DELICIOUS PEARLS

( COUPLETS )

பதிப்பாசிரியர் & உரையாசிரியர்

' நல்லாசிரியர் '

' பெருமபுலவர் ' — ' குறளடிகளார் '

மொ. பழநிமாணிக்கம்

வெளியீடு :

திருக்குறள் பேரவை

தஞ்சாவூர்.

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தித்திக்கும் முத்துக்கள் (திருக்குறள்) / Delicious Pearls (Sacred Kurral) |
| பொருள் | : | ஆங்கில மொழிபெயர்ப்பும், உரையும் |
| பதிப்பாசிரியர் & உரையாசிரியர் | : | 'குறளடிகளார்' மொ. பழநிமாணிக்கம் 13, அப்பாசாமி வாண்டையார் குடியிருப்பு தஞ்சாவூர் — 613009 |
| பதிப்பாண்டு | : | முதற்பதிப்பு திருவள்ளுவராண்டு 2022—மேழம் (சித்திரை) — 1 (14—4—1991) |
| படிகள் | : | 2000 |
| நூல் அளவு | : | 18.5 × 12.5 நூற்றுமாத்தம் (செ.மீ) |
| அச்சுத்தாள் தரம் | : | 14.2 அயிரை (கி.கி) |
| பக்கங்கள் | : | 8 + 68 = 76 |
| அச்சு | : | 10 புள்ளி |
| அச்சகம் | : | ஜெமினி அச்சகம், மேலவீதி, தஞ்சை |
| வெளியீடு | : | திருக்குறள் பேரவை, தஞ்சை. |
| நூற் பகுப்பு எண் | : | 031, 1 C 5 III N1 |

**விலை : உ௫ 6 (உருவா ஆறு)**


A man would do nothing, if he waited until he could do it so well that no one would find fault with what he has done.

— **Cardinal Newman**

தான் செய்ததைப்பற்றி, ஒருவரும் குறை காணாத அளவிற்கு அதை மிக நன்றாகச் செய்ய முடிகிற வரைக்கும் ஒருவன் காத்திருப்பானேயானால், அவன் ஒன்றையும் செய்யமாட்டான்.

— நியூமேன் (புதிய மனிதர்)

# என் முன் உரை

‘ குறளடிகளார் ’
மொ. பழநிமாணிக்கம்,
செயலர், திருக்குறள் பேரவை

தொலைபேசி :
அச்சகம் - 20953
இல்லம் - 22903
13, அப்பாசாமி வாண்டையார் குடியிருப்பு,
தஞ்சை - 613009

பேரன்பின் இனியீர் ! வணங்கி மகிழ்கிறோம் !

தஞ்சைத் திருக்குறள் பேரவையின் நெஞ்சையள்ளும் முதல் வெளியீடு இது !

திருக்குறள், வாழ்வியல் வைரங்கள் அடங்கிய பெரும் பொற்பெட்டகம் அறம், பொருள், இன்பம் எனும் 3 பால்களில் 133 அதிகாரங்களில், 1330 குறள் மணிகளை உள்ளடக்கியதாகும்.

முப்பருமான (3 - D) பாரிய படைப்பாகிய முப்பாலை இயற்றிய பெருமகன் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் ஆவார். அவர், பழந்தமிழகத்தில் 2000 ஆண்டுகட்கு முன் தோன்றி வளர்ந்து இன்றும் நம்முடன் புகழுடம்போடு வாழும் சமூக அறிவியலறிஞர் ; பல்கலைச்செல்வர் ; தொகுப்பரிய தோன்றல் ; புரட்சி மிகு சிந்தனையாளர் ; உலக மாந்தனைப் பாடிய உயர் பாவலர் ; வேறு எவ்வாறு சொல்ல ?

முப்பால் நூல், வலம்புரி முத்துக்கள் பெய்த பொலம்புரிப் பெரும் சிமிழ் ஆகும். அதிகாரம் எனும் ஒவ்வோர் சிமிழுக்குள்ளும் பத்து முத்துக்கள் பாங்குற அடங்கியிருக்கின்றன. அவற்றை அனைவரும் பெற்றுப்பயனடைதல், கால அருமையும், கடமைச் சுமையும் மிக்க இக்காலத்தில் இயலவில்லையெனில் அது இயற்கையே ! எனவே ஒவ்வோர் அதிகாரத்திற்கு ஒரு குறள் மேனி தேர்ந்தெடுத்து 133 குறள்களை அதிகார நிரலே அடுக்கியுள்ளோம். எழுத்துக் கூட்டிப் படிப்போரும் மூலத்தை எடுத்துப் படிக்கும்படி சீர் பிரித்து எழுதியுள்ளோம். அயல் நில மக்களின் பயன் கருதி, அதிகாரத்தின் பெயர், குறள் ஆகியவற்றிற்கு ஆங்கில மொழி பெயர்ப்பு தரப்பட்டுள்ளது. மொழி பெயர்த்தலென்பது

விழிபெயர்த்தலோடு பழிவாங்கும் வேலையுமாகும்; விழிப்பாகச் செய்யாவிடில் விளைவும் வேறாகும். ஆகவே, பல்வேறு மொழி பெயர்ப்புகளை கூர்ந்து நோக்கி, பொருத்தமானவற்றைத் தேர்ந்தும், தேவையான இடத்து திருத்தியும், புதிதாக மொழி பெயர்த்தும் தந்துள்ளோம்.

படத்தொகுப்பு பெரு முயற்சி கொண்டது; பாடல் தொகுப்பு அதனினும் கடினமானது. ஆனால், பழுதறு விழுமிய செழுமணி களாக விளங்கும் 1330 குறள்மணிகளில் அதிகாரத்திற்கு ஒன்று வீதம் தேர்வு செய்வது எளிதான செயலன்று. இருப்பினும், ஆங்கில மொழிபெயர்ப்புகளுடன் தொகுத்து உதவியவரும், சில அதிகாரத் தலைப்புகட்கு அரிய குறிப்புரைகளை எழுதியவரும், அறிஞர்களின் மேற்கோள்களைத் தொகுத்தளித்தவரும், இந்நூல் அச்சாகுங்கால், மெய்ப்புகளை உடனுக்குடன் திருத்தி உதவிய வரும் எனதருமை இளவல் அரசிறைவன் ஆவார். இவர்தம் சலியாத மனத்தையும், அயராத உழைப்பையும். அன்பு அகலாத குடும்பத்தையும் வாழ்த்தி மகிழ்கிறேன்.

இவரே, எனது அறனறிந்த மூத்த புலமையையும் செயல் திறனையும் நோக்கி, தேர்ந்துள்ள குறள்மணிகட்கு ஆர்ந்த பொருளை அழகுற வரைந்துதவும்படித் தூண்டி வேண்டினார்கள். அவ்வேண்டுதலை ஏற்று நனி சுருங்கிய இனிய உரை எழுதி யுள்ளேன். என்னுடைய மணிவிழா ஆண்டில் இவ்வரிய நூலை அணிதிகழ வெளியிடுகிற வாய்ப்பு அமைந்ததையெண்ணி அகம் மிக மகிழ்கிறேன்.

தித்திக்கும் முத்துக்களைப் பொத்தகப் பேழையிலிட்டு, திரு. வி. ஆர் கோவிந்தராசனும், திரு. சி. அரசிறைவனும், நானும் வழங்கி மகிழ்கிறோம். 'குன்றாப் புகழ்ச் செல்வர்' 'கலைப் பொருள் வணிகர்' 'குறள்நெறிச்செல்வர்' கரந்தை திரு. வி. ஆர் கோவிந்தராசனார் திருவள்ளுவர்தம் திருவடிக்கே பதித்த நெஞ்சும் குறள் நெறிகளைப் பரப்புவதற்கென பெருவாரியாக வழங்கும் கைகளும், தொண்டு செய்வதற்கென துவளாது நடக்கும் கால்களும் கொண்ட பெருமகனாவார்கள். திருக்குறள் பேரவையின் பொருளர்; புரவலர்; செந்தமிழ்ப் பற்றும் சிந்தனைத் திறனும் மிக்கவர்; செழுங்கலைச் செல்வர்; செயல் மறவர்; இவர்தம் கைம்மாறு கருதா குறள்நெறித் தொண்டுகளைப் போற்றுவோமாக! இந்நூல் உருவாக்கத்தில் துணைநின்ற திரு. சிவ. சூரியநாராயணன் அவர்கட்கும், இந்நூலை, குறித்த காலத்தில் அடக்க விலையில், அழகுற மெச்சத்தகு வண்ணத்தில், அச்சிட்டுத் தந்த இரட்டையர்(ஜெமினி) அச்சகத்தார்க்கும் எம் உளமார்ந்த நன்றி.

'தமிழினத்தின் வழிகாட்டி' என்று திருவள்ளுவப் பேராசானைச் சுட்டிக் காட்டியவர் பாவேந்தர். அவர்தம் நூற்றாண்டு விழா நிகழும் இவ்வாண்டில் இந்நூலை வெளியிடுவதில் ஒரு பொருத்தமிருக்கிறது. அதுதான் ; நெஞ்சுநிறை இந்நினைவு வெளியீடு!

இனிப்புக் கடைக்காரன் இலவயமாக வழங்கும் மாதிரி இனிப்புத் துண்டுகள் போன்று இதனைத் தந்துள்ளோம். சுவைக்கும் பெருமக்கள் முழுத் திருக்குறளையும் புரட்டிச் சுவைத்து ஊட்டம் பெறுவார்களாக! தேவைக்கேற்ற சில அதிகாரங்களை எடுத்துக்கொண்டு அவற்றிலுள்ள பத்து பத்துக் குறட்பாக்களை நெஞ்சில் பதித்தும் பயனுறலாம்!

"வெல்லாத இல்லை ;
திருவள்ளுவர்வாய் விளைத்தவற்றுள்
பொல்லாத தில்லை ;
புரைதீர்ந்த வாழ்வினி லேஅழைத்துச்
செல்லாத தில்லை ;
பொதுமறை யான திருக்குறளில்
இல்லாத தில்லை;
இணையில்லை; முப்பாலுக் கிந்நிலத்தே!

—பாவேந்தர் பாரதிதாசனார்

பொற்பேழை! உங்கள் கைகளில், இதோ!

உங்கள் அன்புள்ள,

தஞ்சை
14—4—91

[signature]

உயர்ந்தவர்கள் உதட்டிலிருந்து உதிர்ந்த ஒவ்வொரு சொல்லும் வைரம் போன்றதாகும்.

Every word from the lips of a Great man is like diamond.

# MY FOREWORD

' Kuraladikalar ',
Mo. Pazhanimanickam,
Secretary,
Thirukkural Forum

Phone : Press 20953
Res. 22903
13, Appasamy Vandayar
Colony,
Thanjavur - 613 009.

Beloved friends,

We are immensely pleased to greet you on this joyous occasion of our first publication of the Thanjavur Thirukkural Forum.

A golden treasure, as Thirukkural is, it has in store diamonds so sparkling as spelling out the science of life in 1330 couplets grouped in 133 chapters that stand arranged in three distinct parts, virtue, wealth and love.

The three dimensional work of Thiruvalluvar who lived some 2,000 years ago in the land of Tamil Nadu in the southern part of the Indian Peninsula is verily and widely known as "THIRUKKURAL". Thiruvalluvar was a social scientist, master of all arts, synthetic genius, revolutionary thinker, bard of universal man and what not? Thirukkural is indeed a pearl-studded spectrum from wherein flow a stream of delightful verses. In the fast-moving world of today wherein men are indeed loaded with diverse responsibilities it is but natural, one hardly finds enough time to study in depth and be benefitted also, by the thousand and odd couplets of irresistable literary fervour. We have, therefore, endeavoured hard to choose a couplet from each one of the 133 chapters and have also them so arranged that even a beginner of Tamil Language could look forward and decipher every word of each couplet with such clarity as to reach its finer meaning with considerable dexterity. For the benefit of other linguistic bretheren, a free translation of each verse is correspondingly given under each chapter.

Translation, as one would agree, being a challenging job, always demands one's unflinching alertness, which, when fails, leads to unwary results. This translation is therefore,

an exercise anew done after a close and careful perusal of all the existing and erstwhile efforts in this direction. In the process, while we have chosen among some of the existing texts, we have also endeavoured to rectify others if only to further illustrate and thereby bring out the finer elements in the Verses.

If film editing involves determined efforts, editing of verses proves more difficult. It has, therefore, been a demanding job to choose a verse from each chapter consisting of 10 verses from among 1,330 immaculate, priceless pearls. Nevertheless credit for this grandeur effort must at the first instance should necessarily be given to my good brother Mr. C. **Arasiraivan** who had painstakingly not only edited the previous translation but also brought out in postscripts the subtilty of the titles of some of the chapters and included rare references of scholars. He had also checked the proofs as and when they became ready for print. I feel elated in greeting his tireless efforts which were indeed the offspring of his " never-say-nay " attitude of both himself and his love-able family members. In fact, it was his good self that had been the propelling force behind my own effort. Knowing my obsession for a virtuous life coupled with my long innings in the field of teaching Tamil, as he had pleaded for an universally acceptable clear commentary of the selected couplets, I dared to embark upon a meaningful commentary on the select verses

I am extremely happy in releasing this precious book in the year of my 60th Birthday of my worthy life.

The onerous task of enmeshing the scattered pearls of wisdom was pleasantly undertaken by Mr. V. R. **Govindarajan,** Mr. C. **Arasiraivan** and myself who have helped in publishing this greatwork. Mr. V. R. Govindarajan is a devoted soul that is widely known not only for the dedication in propagating the ideals enunciated in the great literary masterpiece of Thiruvalluvar but also for unflinchingf aith in his service to humanity with an uncanny frame of mind towards artistry. As the patron-member and treasurer, Thanjavur Thirukkural Forum, his love for Tamil language is

is firm as his will to serve the Tamil community. I join you all in extolling his detached, selfless and humane services in this direction and wish him many more laurels.

Our sincere thanks are due to Mr. **Siva. Suryanarayanan** who helped in the preparation of this book and to the **Gemini Printers** who have elegantly printed this book at reasonable cost in record time.

" Thiruvalluvar is the guide of Tamils " — so said Bharathidasanar, the king of verses. This year is the birth centenary year of the great revolutionary poet Bharathidasanar. So, we really feel proud to release this book in memory of his adorations of Thirukkural.

What are brought before you are no more than a few samples of sweet sandwiches. Nevertheless, what we do hope is that by going through this edited version, the readers will be further motivated to dwell on and digest the whole gamut of this vast literary work and be benefitted. The reader is also free to have his choice among the 133 couplets, say 10 verses at a time.

" Sans the unconquered
Among produce of Thiruvalluvar's lips ;
Sans the wicked ;
To lead unto a spotless life
Sans that carry ;
In the universal scripture of Thirukkural;
Sans nothing ;
Nothing Parallels " MUPPAL " * in the world ;
— **" King of Verses " Bharathidassanar.**

Here ! The golden casket with pearls is in
your silvery hands !
With greetings,

THANJAVUR,
14 — 4 — 91.

Yours faithfully,

*(Mo. Pazhanimanickam).*

---

* One among the ten captions of " Thirukkural ".



மணிவிழாக் கண்ட வாழ்க்கைத் துணைவர்கள்

**திரு. வி. ஆர். கோவிந்தராசன் — கமலாம்பாள்**

ஆகியோர்களை, இல்லற வாழ்வில், ஆயிரம் பிறைகாண அன்போடு வாழ்த்துகிறோம்.

# I - அறத்துப்பால் - On Virtue

## 1. கடவுள் வாழ்த்து
## Praising the Nature of God

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார் — 6

Those who tread His path of unblemished righteousness and who have mellowed the gates of five organs, will live long.

(வாழ்த்து - இயல்புரைத்தல்)

அடியவர்களின் ஐம்பொறி வாயில்களைப் பதப்படுத்திய இறைவனின் பொய்மை ஒழிந்த ஒழுக்க நெறியில் நிலைத்து நிற்பவர் நீண்டகாலம் இன்புற்று வாழ்வர்.

*பொறிவாயில் ஐந்தவித்தல் — அறிவுப்பொறிகள், (மெய், நா, கண், மூக்கு, செவி) ஐந்து ; கருமப்பொறிகள் (கை, கால், வாய், எருவாய், கருவாய்) ஐந்து ; ஆக, பத்துப்பொறிகளில் வாயில் உடையன ஐந்து மட்டுமே! காது, மூக்கு, வாய், எருவாய், கருவாய் ஆகிய இவ்வைந்து வாயில்களைப் பதப்படுத்துவதன் மூலம் ஒழுக்கம் நிலைபெறும். அறிவுப்பொறி — ஞானேந்திரியம் (வ) கருமப்பொறி — கர்மேந்திரியம் (வ)*

---

With all the whirling waters of all oceans
flowing freely, as ink
With all the soaring sky - high trees
lending themselves to serve as pens,
With all that lush and land and the silky skies
alluring to act as papers, to pen on ;
Would I still say nay, nigh, never
Be able to spell out the subtle splendour amidst
The scintillating substance that shines beneath
The versatile verses which ' VALLUVAR ' bequeathed.

— Anon

---

## 2. வான் சிறப்பு
## Importance of Rain

நீர்இன்(று) அமையா(து) உல(கு)எனின் யார்யார்க்கும்
வான்இன்(று) அமையா(து) ஒழுக்கு — 20.

As the world can hardly exist without water, so there can be no righteous life sans rainfall.

உலகமும் உயிர்களும் நிலைத்தற்கு நீர் இன்றியமையாதது வேண்டப்படுவது போல மக்களின் வாழ்க்கையில் ஒழுக்கம் நிலை பெறுவதற்கு மழை இன்றியமையாது வேண்டும்.

## 3. நீத்தார் பெருமை
## The Greatness of self - Sacrificers

செயற்(கு)அரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்(கு)அரிய செய்கலா தார் — 26

The great are they who achieve what is impossible; that the feeble never even dare.

மக்களுள் செய்தற்கு எளியவற்றைச் செய்யாது அருமையான செயல்களைச் செய்வார் பெரியார்; அவ்வாறன்றி செய்தற்கரிய செயலைச் செய்யவும் முயலாதவர் சிறியர் ஆவர்.

நீத்தார் - தியாகி (வ)-பொது நலம் கருதி, தன்னலத்தைத் துறந்தவர்கள்.

துறந்தார் — துறவி; தன்னுயிர் ஏ டே ற் ற ம் கருதி, தன்னலத்தைத் துறந்தவர்கள்.

---

Thirukkural could not be translated into any European language without exposing the translator to infamy.
—W. H. Drew.

## 4. அறன் வலியுறுத்தல்
## The Emphasis on Virtue

**மனத்துக்கண் மா(சு)இலன் ஆதல் அனைத்(து)அறன்**
**ஆகுல நீர பிற — 34.**

Mind spotless is the essence of all righteousness; all else is vain show.

*அறம் செய்வான் மனத்திலே சிறிது கூட குற்றம் இல்லாதவனாக வாழ்தல் வேண்டும். அதுவே எல்லா அறமும் ஆகும். அஃதொழிந்த தீய நினைவுகளோடு கூடிய நற்செயல்களும் ஆர்வாரத் தன்மையன; அறம் ஆகாது.*

## 5. இல்வாழ்க்கை
## The Family Life

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது — 45**

If a family life possesses love and virtue, it fetches both nobility and fruit.

*இல்வாழ்க்கை தன் துணைவியின்பால் செலுத்தும் அன்பினையும் எல்லோருக்கும் பகுத்துக் கொடுத்து உண்டலாகிய அறத்தினையும் உடையதாயின், அதுவே, அவ்வில்வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆகும்.*

---

No translation can convey an idea of its charming effect. It is truly an apple of gold in a net work of silver

**— Dr. Karl Graul**

---

## 6. வாழ்க்கை துணை நலம்
## The fitness of life Partner

தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்(வு)இலாள் பெண் — 56.

Tireless as she is, who guards herself, her worthy name and fame and tends her spouse with loving care.

தன்னைக் கற்பினின்றும் வழுவாமல் காத்து தன்னை மணந்து கொண்ட கணவனை உணவு முதலியவற்றால் பேணி, இரு வருக்கும் நன்மை அமைந்த புகழ் நீங்காமல் காத்து, தளர்ச்சி இல்லாமல் நற்குண நற்செயல்களில் உயர்ந்து விளங்குபவளே பெண் ஆவாள்.

## 7. மக்கட்பேறு
## The Bliss of Progeny

தம்மின்தம் மக்கள் அறி(வு)உடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கு எல்லாம் இனிது — 68.

It pleases all the eternal lives of the grandeur earth that their children are more knowledgeable than themselves.

தம்மக்கள் தம்மைவிட எல்லாவகையிலும் அறிவுள்ளவர் களாக விளங்குதல் உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் இன்பம் தரும்,

---

The Kural is the maste piece of Tamil literature - one of the highest and purest of expressions of human thoughts.

— **Ariel.**

---

## 8. அன்புடைமை

## The Possession of Love

அன்(பு)இலார் எல்லாம் தமக்குஉரியர்; அன்புஉடையார்
என்பும் உரியர் பிறர்க்கு — 72

Those devoid of love are selfish and have all to themselves ; those who possess love sacrifice even the frame of their body for others.

*உள்ளத்தில் அன்பு இல்லாதவர் எல்லாப்பொருளையும் தமக்கே உரியது என்று எண்ணி பயன்படுத்துவர் ; அன்பு உடையவர் பொருளாலன்றித் தம் உடம்பையும் பிறர்க்கு உதவுவர்.*

*அன்பு = அல் + பு —இரண்டல் தன்மை ; தன்னையும் பிறரையும் வேறுபடுத்திப் பாராத, உயர்ந்த மனம், மொழி, செயல்கள். கண்ணப்ப நாயனார் காளத்திநாதரிடம் வைத்தது போன்றது.*

*உடைமை — உடலோடு பொருந்திக் கொள்ளும் உடை போல, வாழ்வியலோடு ஒட்டிக்கொள்ளும் தன்மை.*

## 9. விருந்தோம்பல்

## Cherishing Guests

இருந்(து)ஓம்பி இல்வாழ்வ(து) எல்லாம் விருந்(து)ஓம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு — 81

That to sit and cherish the family life would go all for the sake of entertaining guests with kind help.

*இல்லறத்தில் இருந்து மனைவி மக்கள் முதலானவர்களைப் பாதுகாத்து வாழ்வதெல்லாம் வருகின்ற விருந்தினர்களைப் பேணி, அவர்களுக்கு உதவி செய்தற் பொருட்டேயாகும்*

*விருந்து — ஒழுக்கமும், அறிவும், தன்மதிப்புள்ள புதிய அயலார். ஓம்பல் — தாயினும் பரிந்து போற்றிப் பேணுதல்.*

---

Kural will enrich your heart, enlarge your mind and develop your personality.

---

## 10. இனியவை கூறல்

## The mellifluous speech.

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின் — 96.

In seeking good if one speaks sweet, as evil wanes virtue will multiply.

பிறருக்கு நன்மை தரும் சொற்களை ஆராய்ந்து உணர்ந்து எல்லோரிடமும் இனிமையான சொற்களைச் சொல்லுவதால் தீமைகள் குறைந்து அறச்செயல் வளரும்.

## 11. செய்ந்நன்றியறிதல்

## The perception of gratefulness

நன்றி மறப்பது நன்(று)அன்று ! நன்(று)அல்ல(து)
அன்றே மறப்பது நன்று — 108

It is not good to forget the help received; it is good to forget all that's bad instantly.

பிறர் செய்த உதவியை மறப்பது வாழ்விற்கு நல்லதாகாது; பிறர் செய்த தீமையைச் செய்த அப்போதே மறந்து விடுவது நல்லதாகும்.

---

Maxims about joy in activity, such as one would not expect from Indian lips, bear witness to the strength of the world and life affirmation p esent in the kural.

**Dr. Albert Schweitzer.**

---

## 12. நடுவு நிலைமை
## The State of Impartiality

நன்றே தரினும் நடுவுஇகந்(து)ஆம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல் — 113

Though it yields good alone, abandon on the very day the illgotten fortune through unjust means.

*நடுவுநிலைமை தவறி நடப்பதால் பெறும் செல்வம் பலவகையிலும் நன்மையே தருவதாயினும் அப்பொழுதே அச்செல்வத்தை நீக்கி நடுவுநிலைமைத் தவறாது வாழவேண்டும்.*

## 13. அடக்கம் உடைமை
## Possession of Self Restraint

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின்ஊங்(கு) இல்லை உயிர்க்கு — 122

Guard self control as your treasure ; there is no greater fortune than that to human lives.

*மக்களுக்கு அடக்கத்தைவிடச் சிறந்த செல்வம் இல்லை. ஆதலால், அவ்வடக்கத்தைச் சிறந்த பொருளாகக் கொண்டு போற்றிக் காக்க வேண்டும்.*

*அடக்கம் — தன்னுற்றலையும், பொறிகளையும் பாதுகாத்துத் தேவையான காலத்து, தேவையான அளவில் பயன்படுத்துதல் ; தன்நிலையில் திரியாமை.*

---

It is obvious that such a code as this could only arise among an essentially moral and noble race.

**— Sir. A. Grant**

---

## 14. ஒழுக்கம் உடைமை

## Possession of Righteous Conduct.

உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறி(வு)இலா தார் — 140

These who cannot move harmoniously in accordance with the world are learned fools.

உலகத்து மக்களோடு பொருந்தி வாழ்தலை அறியாதவர், பல நூல்களைக் கற்றவராயினும் அறிவில்லாதவராவார். ஒழுக்கம் - இடையறாது தொடர்ந்து நிகழ்த்தும் நன்னடத்தை.

## 15. பிறன் இல் விழையாமை

## Avoidance of coveting Another's wife or Non - interference in other's famiey affairs.

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று — 150.

Although one practised no virtue but acts of vice only it would be good, if he covets not the womanhood of another.

ஒருவன் அறத்தைச் செய்யாது பாவங்களைச் செய்தாலும் பிறன் மனைவியை விரும்பாது இருத்தல் நல்லது.

இல் - மனைவி, குடும்பம் ஆகிய இரு பொருள்படும் பிறன் இல் விழையாமை - பிறரின் மனைவி, குடும்பம் ஆகிய உள்நிலைச் செயற்பாடுகளில் தலையிட விரும்பாமை.

---

To those, therefore, who labour for the salvation of Tamil people, the kural must be a work of peculiar, nay intense interest.

— **Rev. Dr. J. Lazarus.**

---

## 16. பொறை உடைமை

## The Possession of Patience

**ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம் ; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ் — 156.**

The delight of the avenger is for a day ; the glory of the forbearing lasts for ever.

*தீமை செய்தவனைத் தண்டித்தவர்க்கு ஒரு நாள் மட்டுமே இன்பம் உண்டாகும். அத்தீமைகளைப் பொறுத்தார்க்கு உலகம் அழியும் அளவும் புகழ் உண்டாகும்.*

## 17. அழுக்காறாமை

## Avoidance of Envy

**அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்(கு) அறிந்து — 164.**

The wise do not commit any wrong out of envy, for they know the evils that spring from it.

*அறிவுடையவர்கள் அழுக்காறு என்னும் தீய நெறியால் தமக்குத் துன்பம் வருதலை அறிந்து பொறாமையால் நிகழும் அறமல்லாத தீயவைகளை ஒரு போதும் செய்யமாட்டார்கள்.*

*அழுக்காறு (அழுக்கு + ஆறு) — அழுக்கு நெறி.*

---

There is no doubt that no one can pretend to scholarship in Tamil unless he reads and understands this master - piece of Tamil literature

— Frederic Pincott

---

## 18. வெஃகாமை

## Avoidance of Covetousness

அஃகி அகன்ற அறி(வு)என்னாம்? யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின் — 175.

Of what avail is one's subtle and comprehending wisdom, if it senselessly deals with everyone with greed?

எல்லோரிடத்தும் உள்ள பொருளை அடைய விரும்பி அளவில்லாத தீய செயல்களைச் செய்வானாயின் அவன் எவ்வளவு தான் நுட்பமான அகன்ற அறிவைப் பெற்றிருந்தாலும் என்ன பயனைச் செய்யும்?

## 19. புறங்கூறாமை

## Avoidance of Backbiting

புறம்கூறிப் பொய்த்(து)உயிர் வாழ்தலின் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும் — 183

It is worthier to die than live by lying and slander; for such death brings fruits of righteousness.

பிறரைக் காணாத வழி இகழ்ந்து கூறி கண்டவழி அவர்க்கினியனாய்ப் பேசி பொய்மையாக உயிர்வாழ்தலைவிட அது செய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் கூறும் ஆக்கத்தைக் கொடுக்கும்.

---

There hardly exists in the literature of the world a collection of maxims in which we find so much lofty wisdom

— **Dr. Albert Schweitzer**.

## 20. பயனில சொல்லாமை

## Avoidance of Idle talk

**சொல்லுக சொல்லிற் பயனுடைய! சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல் — 200**

Speak thou only such words as are of worth and gain and speak not the words which are of no use and vain.

ஒவ்வொருவரும் சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்ல வேண்டும்; சொற்களில் பயனில்லாத சொற்களைச் சொல்லாது நீக்குக.

பயனில சொல்லல்—வெட்டிப்பேச்சு.

## 21. தீவினை அச்சம்

## Dreading Evil deeds

**தீயவை தீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும் — 202**

The deeds of evil fetch evil; therefore evil is to be dreaded even more than fire.

பிறர்க்குச் செய்யும் தீயசெயல்கள் பயன் கொடுக்கும்போது தனக்கும் தீமையைத் தருதலால், அத்தன்மையனவாகிய தீயசெயல்களுக்குத் தீயைக் காட்டிலும் அஞ்சவேண்டும்.

---

பரந்த நோக்கோடு விரிந்த வகையில் குடிசெயல் தொண்டாற்றிய தனிப்பட்ட தமிழ்த்தலைவர் திருவள்ளுவர் ஒருவரே; பின்னர் பெரியார் எழுந்தார்.

— மொழிஞாயிறு பாவாணர்.

---

## 22. ஒப்புரவு அறிதல்

## Realising Public Service

**இடனில் பருவத்தும் ஒப்புரவிற்(கு) ஒல்கார்**
**கடன்அறி காட்சி யவர் — 218**

The men of crystal clear vision of their own duty will not shrink from their own public obligations even in poverty.

**தாம் செய்யவேண்டிய கடமைகளை அறிந்த நல்லறிவுடையோர் செல்வம் குறைந்த காலத்தும் பொதுத் தொண்டாற்றுவதிலிருந்து விலகமாட்டார்கள்.**
**ஒப்புரவு — பொதுத்தொண்டு.**

## 23. ஈகை

## Charity

**நல்ஆ(று) எனினும் கொளல்தீது மேல்உலகம்**
**இல்எனினும் ஈதலே நன்று — 222**

Even if it benefits receiving is bad ; though the heaven is denied to giver, even then charity would be the best virtue.

**அம் வாழ்விற்கு நன்மை தருவதாயினும், பிறரிடம் ஒரு பொருளை கொள்வது தீது ; பிறர்க்குக் கொடுப்பதால் உயர்ந்த வாழ்வு இல்லை என்றாலும், கொடுப்பதே நல்லது.**

---

நான் தமிழ் படிக்கத் தொடங்கியதற்குக் காரணம் திருக்குறள் மூலத்தை நேரடியாகப் படித்தல் வேண்டும் என்ற ஆசைதான்.

— காந்தியடிகள்

---

## 24. புகழ்

## Glory

**தோன்றின் புகழொடு தோன்றுக ! அஃ(து)இலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று — 236**

Whenever you rise, rise with glory. On failing it is better, you need not rise at all.

*மனிதனாகப் பிறந்தவன் புகழுக்கு ஏதுவான செயல்களோடு வாழ்தல்வேண்டும்; அப்புகழுக்கு ஏதுவான செயல்களோடு வாழ முடியாதவன் வெளிப்படாமல் இருத்தல் நல்லது.*

*புகழ்— புகு > புகல் > புகழ் - தம் மறைவிற்குப் பின்னும் யாவரும் விரும்பிப் புகன்று கொண்டிருப்பதற்குரிய தன்மையும், பலரின் உள்ளத்துப் புகுந்து வாழும் தன்மையுமாகும்.*

*தோன்றுதல் — மறைந்திருந்து வெளிப்படுதல்.*

## 25. அருள் உடைமை

## Possession of Compassion

**நல்லாற்றின் நாடி அருள்ஆள்க பல்லாற்றான்**
**தேரினும் அஃதே துணை — 242**

Tread good path to exercise compassion. Looking from every angle compassion alone is salvation.

*நல்ல வழிகளில் நின்று எல்லாவுயிர்களிடத்தும் அருளுடையவனாக வாழ்வாயாக! ஏனென்றால், பல சமய உண்மைகளை ஆராய்ந்து பார்த்தாலும் அவ்வருள் ஒன்றுதான் இறுதிவரை துணையாக நிற்கும்.*

*அருள் — அரு + உள் — உளத்தின் அருவாகிய பரந்த உயிரிரக்கம்.*

---

*திருக்குறள் வடமொழிக் கலப்பற்ற தனித்தமிழ்நூல்.*

— கால்டுவெல்.

## 26. புலால் மறுத்தல்
## Rejection of Flesh-Eating

உண்ணாமை வேண்டும் புலாஅல் ; பிறி(து)ஒன்றன்
புண்அ(து) உணர்வார்ப் பெறின் — 257

If one realises that flesh eating is but eating the wound of another, one refrains from eating the same.

புலால் என்பது பிறிதோர் உடம்பின் புண்ணாகும். அந்தப் புலாலைப் புண் என்று உணர்பவர் புலால் உண்ணாமை வேண்டும்.

## 27. தவம்
## Penance

தவம்செய்வார் தம்கருமம் செய்வார் ;மற்(று) அல்லார்
அவம்செய்வார் ஆசையுள் பட்(டு) — 266

Those who do penance discharge their legitimate duties ; others do vain things caught in the mesh of desire.

தம் கருமமே கண்ணாக இருந்து செயலாற்றுபவர் தவம் செய்கிறவர் ஆவார். அவ்வாறன்றி, தவறான செயல்களைச் செய்பவர் ஆசைக்கு அடிமைப்பட்டு வீணான செயலைச் செய்பவராவார்.

---

தமிழுக்கு உயிர் தொல்காப்பியம்
தமிழர்களுக்கு உயிர் திருக்குறள்
தமிழ்நாட்டுக்கு உயிர் சிலப்பதிகாரம்

## 28. கூடா ஒழுக்கம்

## The Hypocritical Conduct

தவம்மறைந்(து) அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த்(து) அற்று — 274.

The man who takes cover under a saintly garb and does evil is like the fowler hiding in the bush and entraping birds.

ஒருவன் தவ வேடத்தில் மறைந்து கொண்டு வேடத்திற்குப் பொருந்தாத தீய செயல்களைச் செய்வது வேட்டுவன் புதரில் மறைந்து நின்று பறவைகளைப் பிடிப்பது போன்றதாகும்.

## 29. கள்ளாமை

## The Avoidance of Deceitful Gains

உள்ளத்தால் உள்ளலும் தீதே! பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல் — 282

Even a covetous thought to possess through fraud what belongs to another is sinful.

பிறர் பொருளை அவர் அறியாமல் வஞ்சனையால் கவர்ந்து கொள்வோம் என்று உள்ளத்தால் நினைத்தலும் தீதாகும்.

---

தமிழனாகப் பிறந்து கம்யூனிசுடாக இருக்கின்ற ஒருவன் திருக்குறளைப் படித்திராமல் மார்க்சியம் மட்டும் படிப்பதினால் இந்த மக்களுக்கு ஒரு பயனும் ஏற்படாது.

— தோழர். ப. சீவானந்தம்

---

## 30. வாய்மை

## Harmless speech

யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லைஎனைத்(து) ஒன்றும்
வாய்மையின் நல்ல பிற— 300

In all the scriptures we have really found there is no virtue greater than truth.

யாம் உண்மையாகக் கண்ட நூல்களுள் கூறப்பட்ட அறங்களுள் வாய்மையை விடச் சிறந்த அறம் வேறொன்றும் இல்லை.

வாய்மை—யாதொன்றும் தீமையிலாத உண்மையும் புரை தீர்த்த நன்மைபயக்கிற பொய்மையும் சொல்வது ; இஃது ஒரு சொல் நிலை அறமாகும்.

## 31. வெகுளாமை

## Avoidance of Anger

மறத்தல் வெகுளியை யார்மாட்டும்; தீய
பிறத்தல் அதனால் வரும் — 303

Forget thy anger towards anyone for from anger spring evils.

எல்லோரிடத்தும் சினங்கொள்ளுதலை நீக்கல் வேண்டும். ஏனெனில், தனக்கும் பிறர்க்கும் அச்சினத்தினால்தான் தீமைகள் தோன்றும்.

---

அமுத்தமிகு குறளினுக்(கு) ஒப்பாகவே பொருள் அடக்கமும் இருக்கவேண்டும்.

— குமரேச சதகம்.

---

## 32. இன்னா செய்யாமை

## Avoidance of Injury to others

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான்ஆம்
மாணாசெய் யாமை தலை — 317

The crown of all virtues is the abstain from conscious injury of any kind, to anyone, at any time.

*மனம் அறிந்த தன்நிலைக்கு மாறான தீயசெயல்களை எவ்வளவு சிறியதாயினும் எந்தக்காலத்திலும் எவருக்கும் செய்யாமல் இருத்தலே தலையாய அறமாகும்.*

## 33. கொல்லாமை

## Avoidance of Killing

தன்உயிர் நீப்பினும் செய்யற்க ! தான்பிறி(து)
இன்உயிர் நீக்கும் வினை — 327

Although one should lose one's own life, let no one do that which would destroy the precious life of another.

*தான் பிறிதோர் இன்னுயிரை அதன் உடம்பினின்றும் நீக்கும் தொழிலைத் தன்னுயிர் நீங்கிப் போமாயினும் செய்யாதிருத்தல் நல்லது.*

---

*உயிர்கள் எல்லாம் விழைவது இன்பமே ! வாழ்க்கை போராட்டம் நிறைந்ததுதான். வாழ்வின் சாரமே 'துன்ப நீக்கம் ; இன்ப ஆக்கம்' —என்பதுதான். இன்பம் மூவகை என்பர்— இம்மையின்பம், மறுமையின்பம், பேரின்பம்.*

*இம்மையின்பம் — இவ்வுலக வாழ்விலே பெறுவது.*

*மறுமையின்பம் — இப்பிறப்பின் நல்வினைக்குரியதாக, மறு பிறப்பில் எய்துவது.*

*பேரின்பம் — பிறப்பு இறப்பு இன்றி பேராயியற்கையில் எய்தும் நிலைத்த இன்பம்.*

---

## 34. நிலையாமை

## Instability

**நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேல்சென்று செய்யப் படும் — 335**

Before the tongue gets benumbed and throat chocked by hiccups, hasten to go up and do good deeds.

*பேசமுடியாதபடி நாவை இழுத்து விக்கல் மேலெழுந்து உயிர் பிரிவதற்கு முன்னே நல்வினைக்கு ஏதுவான நல்ல செயல்களைத் தானே முயன்று செய்தல் வேண்டும்.*

## 35. துறவு

## Renunciation

**யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் — 341**

Whatsoever thing a man has renounced, he has liberated himself from the grief arising out of them.

*எந்த எந்த பொருளினின்றும் பற்றை விட்டு நீங்கினவன், அந்த அந்தப் பொருளால் வரும் துன்பத்தினின்றும் நீங்கி வாழலாம்.*

---

*வீடு என்பது வாழ்வின் உறுதிப் பொருளன்று ; அது உயிர் பிறப்பற்று விடுதலை பெற்ற நிலை என்னும் காரணப் பொருளது. உயிர் வீடு அடைதல் சிறந்த பயன் என்பதால் வீடு உயிரின் உறுதிப் பொருளேயன்றி மக்கள் வாழ்வின் உறுதிப் பொருளன்று.*

## 36. மெய் உணர்தல்

## Realisation of Reality

**எப்பொருள் எத்தன்மைத்(து) ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு — 355.**

Whatever thing of whatever kind it be it is wisdom to perceive the real truth.

*எந்தப்பொருள் எந்தத்தன்மையில் காணப்படினும் கேட்கப் படினும் அப்பொருளின் உண்மைத் தன்மையைக் கண்டறிவதே அறிவாகும்.*

## 37. அவா அறுத்தல்

## Rooting out Desire

**அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்**
**அற்றாக அற்ற(து) இலர்— 365**

The desireless alone are truly freed ones; all the rest appear to be free but they are in bondage.

*உலகத்தவரால் முழுவீடுதலையுற்றவர் என்பபடுபவர் ஆசைகளை நீக்கியவரே ஆவார்; ஆசைகள் ஒழிந்த பிறவற்றை நீக்கியவர் ஒன்றினையும் நீக்கியவராகமாட்டார்.*

*அவா—தேவை நிரம்பினும், வேட்கை நிரம்பாத தன்மை*

---

*வீடுபேறு என்ற சிந்தையும் மனமும் செல்லா நிலைமையை பெருநாவலர் பெருமான் 'சிறப்பு' என்னும் ஒரு சொல்லால் குறிப்பர். உறுதிப் பொருள்கள் மூன்றினும் சிறந்ததாகலின் சிறப்பாயிற்று. பிறப்பு, இறப்பு நீங்கிய நிலை 'சிறப்பு' ஆகும்.*
*பிறப்பு இறப்பு — பொது*
*வீடுபேறு — சிறப்பு.*

## 38. ஊழ்

## Destiny

**நன்(று)ஆங்கால் நல்லவாக் காண்பவர் அன்றுஆங்கால்
அல்லல் படுவ(து) எவன்? — 379**

Why would the men who welcome good things and enjoy their gain, quite fret and fume when they are in adverse circumstances?

நல்வினையால் வரும் இன்பப்பயன்களை விரும்பித் துய்ப்பவர் தீவினையால் வரும் துன்பப்பயனை வெறுப்பது ஏன்? துன்பப் பயனும் தானே தேடிக்கொண்டது என உணர்தல் வேண்டும்.

ஊழ் — முறை; உலகத்தியற்கை.

மலரவேண்டிய காலத்துப் பூத்துப்பொருந்தி, வாடி நீங்க வேண்டிய காலத்து உதிரும் வினையின் இயல்பு. ஊழ் அதிகாரத்தை மட்டும் தனியே படித்தல் ஆகாது. ஆள்வினை உடைமை அதிகாரத்தோடு இணைத்துப் படித்தல் வேண்டும்.

ஊழ் என்பது உலகத்து இயற்கை (374). ஊழ்வினை ஆள்வினைக்கு எதிரானது. ஊழ்வினையில் இயற்கை ஆற்றல் மிகுந்தும் மாந்த முயற்சி குறைந்தும் காணப்படும். ஆள்வினையில் மாந்த முயற்சியோடு கூடிய உழைப்பு மிகுந்தும் இயற்கை யாற்றலின் வலிவு குன்றியும் இருக்கும்.

'ஊழிற் பெருவலி யாவுள? (380) என்பது தொடக்கநிலைக் கேள்வி ஆனால், அது உயர்நிலையில் உடைத்து எறியப்பட்டு, ஊழையும் உப்பக்கம் கண்டு வெற்றி பெறுவர். அவ்வெற்றியை யாவரும் கண்ணால் காணலாம் என்பதனைக் 'காண்பர்' (620) என்று தெளிவுபடுத்தியுள்ளார். இதனை நாம் மனத்தால் உணர்ந்து, மொழியால் பலருக்கும் அறிவுறுத்தி, மெய்யால் உழைத்து உயரவேண்டும். ஊழை நம்பி உடைந்துபோய் உட்கார்ந்து விடலாகாது.

---

ஊழ்வினை உருத்து எழுந்து வருத்த வந்தாலும் அதனை வெறுத்து ஒதுக்கி தாழாது உஞற்றி துரத்தியடித்து வெற்றி பெற முடியும் என்பதே திருவள்ளுவம்.

---

# II பொருட்பால் - On Wealth

## 39. இறைமாட்சி

## The Grandeur of Monarchy

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்(கு)**
**இறைஎன்று வைக்கப் படும் — 388**

The king who rules and protects his subjects justly is specially placed as a God.

*நீதி நெறி தவருது குடிமக்களது நன்மையைப் பாதுகாக்கும் அரசனை மக்களுக்கு இறைவன் என்றே கொள்ள வேண்டும்.*

## 40. கல்வி

## Learning

**கற்க கசடறக் கற்பவை ; கற்றபின்**
**நிற்க அதற்குத் தக – 391**

Learn thoroughly the subjects that are worth learning; while learning so, stick to what is acquired by learning.

*ஒருவன் கற்க வேண்டிய நல்ல நூல்களை குற்றம் இல்லாமல் கற்றல் வேண்டும். அவ்வாறு கற்கும்போதே அவ்வொழுக்கத்தில் நின்று வாழ்தல் வேண்டும்.*

---

*மூடநம்பிக்கை ஒழிந்து அறிவு செம்மைப்பட திருக்குறள் செம்மையான வழிவகுத்துக் கொடுக்கும் குறள் கருத்துகள் நன்கு நாடெங்கும் பரப்பப்படுதல் வேண்டும். கல்வி என்றாலே, "திருக்குறள் கல்வி" அறிவு என்றாலே "திருக்குறள் அறிவு" என்று தான் கருதப்படவேண்டியுள்ளது.*

— பெரியார்

---

## 41. கல்லாமை

## Non-Learning

விலங்(கு)ஒடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றார்(ஓ)டு ஏனை யவர் — 410

Just as beasts are by the side of men, so are other men by the side of those who are learned in celebrated works.

விலங்குகளை நோக்க மக்கள் உயர்ந்தவராவர். அவ்வாறே, விளங்கிய நூல்களைக் கற்றவர்களை நோக்க கல்லாதவர் இழிந்தவராவார்.

## 42. கேள்வி

## Asking / Listening

கற்றிலன் ஆயினும்கேட்க ! அஃ(து) ஒருவற்(கு)
ஒற்கத்தின் ஊற்றாம் துணை — 414

Although one has not learnt at all if one asks / listens to the wise, that will be his prop in his hour of gloom.

நூல்களைக் கற்காமல் போனாலும் கற்றறிந்த பெரியவர்கள் சொல்லும் மொழிகளையாவது கேட்டுத் தெரிதல் வேண்டும். அவ்வாறு கேட்பது வழுக்கு நிலத்தில் ஊன்றுகோல் உதவுவது போல வாழ்வில் துன்பம் ஏற்படும்போது துணை செய்யும்,

---

மானுடப் பண்புகட்கு உறைவிடமாய்—வாழ்க்கை வழி, நெறி முறைகளுக்கான வழிகாட்டியாய் அமைந்துள்ளது நமது திருக்குறள்.

— அறிஞர் அண்ணா

## 43. அறிவு உடைமை

## Possession of Wisdom

சென்ற இடத்தால் செலவிடாது தீ(து)ஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு — 422

Not to let the mind wander whereever will it roam, but, to withdraw it from evil and direct it to good is wisdom.

ஒருவன் மனதைச் சென்ற ஐம்புலன்களின் வழியில் செல்ல விடாது தடுத்து அப்புலன்களின் நன்மை தீமைகளை ஆராய்ந்து நல்லவழியில் செலுத்துவதே அறிவாகும்.

## 44. குற்றம் கடிதல்

## Rejecting one's Fault with Disdain

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு — 436

If the King could correct his own fault before looking into those of others, what fault can approach him?

நாட்டை ஆளும் அரசன் முதற்கண் தன் குற்றத்தை உணர்ந்து நீக்கி, பின்னர் பிறர் குற்றத்தைக் காணும் பொது நிலையைப் பெறுவானாயின் அவ்வரசனுக்கு என்ன குற்றம் வந்து சேரும்?

கடிதல் — வெறுத்து ஒதுக்குதல்.

---

வள்ளுவப் பெருமான் சொல்லிய வழியில்
வாழ்வது அறிவுடைமை.

— பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

## Gaining the aid of the Great

அரியவற்றுள் எல்லாம் அரிதே ! பெரியாரைப்
பேணித் தமராக் கொளல் — 443

To cherish men of greatness and secure their friendship is deemed to be the rare amongst the rarest things.

பெரியோரைப் போற்றி அவர் விரும்பியாங்கு வாழ்ந்து அறிவோடு உறவாக்கிக் கொண்டு வாழ்வது அருமையான பொருள்கள் அனைத்திலும் சிறந்த பொருளாகும்.

பெரியார் — செயற்கரிய செய்யும் உயர்ந்தவர்.

## 46 சிற்றினம் சேராமை

## Avoidance of Mean Association

சிற்றினம் அஞ்சும் பெருமை ! சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும் — 451

Greatness dreads mean — minded men ; meannes regards it as kindred.

பெருமைக்குரியவர்கள் அறிவால் தாழ்ந்தவர்களிடத்தும் பழகுவதற்கு அஞ்சுவார்கள். சிறுமைக்குரியவர்கள் தம் தகுதிக்கு ஒத்தவர்களை உறவாகக் கொண்டுதான் வாழ்வார்கள்.

---

தகுசீர்த்தித் தலைவரான வள்ளுவர் அருளிச்செய்த தொகுசீர்த்தி அறநூல்.

— பாவேந்தர்

## 47. தெரிந்து செயல்வகை

## Deliberating on ways of Action

நன்(று)ஆற்றல் உள்ளும் தவ(று)உண்டு அவரவர்
பண்(பு)அறிந்து ஆற்றாக் கடை — 469

It is a blunder too when even a good deed is done, when done without knowing the dispositions of each one.

*அவரவர் குணங்களை ஆராய்ந்தறிந்து அவற்றிற்கேற்ப உதவி செய்யாவிடில் நல்ல செயல்களைச் செய்வதிலும் கூட குற்றம் உண்டாகிவிடும்.*

*தூக்கி வினை செய் — ஆத்திச்சூடி (60)*

## 48. வலி அறிதல்

## Discerning the Strength

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல் — 471

Weigh the magnitude of the action, your own strength, the strengh of your enemy and the strength of allies and resort to action.

*தான் செய்ய எண்ணிய செயலின் வலிமையையும், அதனைச் செய்யும் தம் வலிமையையும், எதிரியின் வலிமையையும் இருவருக்கும் துணையாக அமைந்தவர் வலிமையையும் ஆராய்ந்து பார்த்துத் தன் வலிமை மிகுதியாயின் செய்தல் வேண்டும்.*

---

*திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதி*

— பாரதியார்

---

## 49. காலம் அறிதல்

## Discerning the Opportune Moment

**ஞாலம் கருதினும் கைகூடும் காலம்**
**கருதி இடத்தாற் செயின் — 484**

You can conquer even the whole world, if you choose the proper time and place and act.

*தாம் செய்யுஞ் செயலைச் செய்தற்குரிய காலத்தை எண்ணி, தகுதியான இடத்தில் செய்தால் உலகத்தையே ஆள எண்ணினாலும் நிறைவேறும்.*

*காலம் அறிந்து ஆங்கு இடன் அறிந்து செய்வினையின் மூலம் அறிந்து விளைவு அறிந்து மேலும் தாம் சூழ்வன சூழ்ந்து துணைமை வலி தெரிந்து ஆள்வினை ஆளப் படும் — நீதிநெறி விளக்கம் (51)*

## 50. இடன் அறிதல்

## Choosing the Appropriate Place

**அஞ்சாமை அல்லால் துணைவேண்டா ! எஞ்சாமை**
**எண்ணி இடத்தாற் செயின் — 497**

If after full deliberation, one acts at the right place, one needs no support excepprt fearless might.

*தாம் செய்யும் செயல்களில் வெற்றிபெறும் திறங்களை எல்லாம் எண்ணி அவற்றை இடத்தோடு பொருந்தச் செய்தால், அச் செயலைச் செய்து முடிப்பதற்குத் துணிவு ஒன்றே போதும்.*

---

*திருக்குறள் நவத் தமிழ் வேதம்,*

— சிவப்பிரகாசர்

## 51. தெரிந்து தெளிதல்

## Testing Men and Trusting them

குணம்நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல் — 504

Consider merit as also faults ; see which weighs more and choose the man with greater merit.

ஒருவன் நல்ல குணங்களை ஆராய்ந்து, ஏனைய குற்றங்களையும் ஆராய்ந்து, அவற்றுள் மிகுதியாக உள்ள குணங்களை ஆராய்ந்து, அம்மிகுதியான் தன்மையாலே மதிப்பிடுக.

தெரிவியல் — Theory

தெரிதல் — மதிநுட்ப நூலறிவோடு அறிஞர் குழுவின் துணை கொண்டு தீர ஆராய்தல்.

## 52. தெரிந்து வினையாடல்

## Testing to Employ Men

இதனை இதனால் இவன்முடிக்கும் என்(று)ஆய்ந்து
அதனை அவன்கண் விடல் — 517

Decide the means, the person, the scheme to execute and delegate the job to him.

நன்றாகத் தெரிந்து செய்யக்கூடிய செயலைக் காலத்தாலும், இடத்தாலும், பிற கருவியாலும் இவன்தான் செய்து முடிப்பான் என்பதைத் தேர்ந்து தெளிந்து அவனிடம் அந்தச் செயலைச் செய்யுமாறு ஒப்படைத்தல் வேண்டும்.

---

தமிழ்நாடு — நாட்டின் பெயரே 'தமிழக நாடு' என்று மொழிப்பற்றையும் குழைத்து வாட்டக்காணுங்கள்; தமிழ்ப்படி என்று ஏவல் செய்வதை நினையுங்கள்!

---

## 53. சுற்றந் தழால்

## Supporting Kinsmen

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன் — 524

To lead a life surrounded by relatives is the fruit derived from acquisition of wealth.

*செல்வம் பெற்றதன் பயன் உறவினர்களைப் போற்றி அவர்கள் இன்புறச் சூழ்ந்து வாழ்வதேயாகும்.*
*சுற்றம் — சுற்றி வாழும் பல்திறலயினர்.*

*குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை—கொன்றை வேந்தன் (18)*

## 54. பொச்சாவாமை

## Avoidance of Forgetfulness

பொச்சாப்பார்க்(கு) இல்லை புகழ்மை; அதுஉலகத்(து)
எப்பால்நூ லோர்க்கும் துணிவு — 533.

No glory for the forgetful person that is the final conclusion of scholars all over the world.

*மறதியை உடையார்க்குப் புகழ் இல்லை. அம்மறதி எத்துறையினர்க்கும் வளர்ச்சியைக் கெடுக்கும் என்பது எல்லா நூல் வல்லார்க்கும் துணிவான கருத்தாகும்.*

---

அறிவின் எல்லை கண்டேரன்
உலகை அளந்து கணக்கிட்டேரன்.

— கவிமணி தேசிகவிநாயகம்

---

## 55. செங்கோன்மை

## The Reign of Right Sceptre

**ஓர்ந்துகண் ஓடா(து) இறைபுரிந்(து) யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை — 541**

Deliberate well and lean not to either side, be impartial and consult the men of law, that is the way to administer justice.

*மக்களின் குற்றங்களை நன்கு ஆராய்ந்து உணர்ந்து வேறு பாடின்றி நடுவு நிலையில் நின்று பிழை செய்தவர் குற்றத்திற்குரிய தண்டனையை வழங்குவதே நீதியாகும்.*

*கோல் — அக்காலத்தில், அரசர்கள் கையில் வைத்திருந்த மணிகள் அடுத்துப் பெற்று பொன்பூண் பொருத்திய கோலைக் குறித்தது.*

*இக்காலத்தில் அரசாள்வோரின் கையில் வைத்துள்ள எழுதுகோலையும் வாயில் உள்ள நாக்கு ஆகிய கோலையும் குறிக்கும்.*

## 56. கொடுங்கோன்மை

## The Reign of Cruel Sceptre

**கொலைமேற்கொண் டாரின் கொடிதே ! அலைமேற்கொண்(டு)
அல்லவை செய்(து)ஒழுகும் வேந்து — 551**

The unrighteous king who harasses and oppresses his subjects is more cruel than the one who leads the life of a murderer.

*பகை காரணமாகக் கொலை செய்யும் கொடியவனைக் காட்டிலும் குடிமக்களைத் துன்புறுத்தும் செயலை மேற்கொண்டு நீதியல்லாத செயல்களைச் செய்யும் அரசன் கொடியவனாவான்.*

---

*தனித்தமிழ் நூலாகிய திருக்குறளுக்குப் பரிமேலழகர் வட நூலார் சமயம்பற்றியே உரை வகுத்தேகினர்.*

— பரிதிமாற் கலைஞர்

---

## 57. வெருவந்த செய்யாமை

## Avoidance of Terrorism.

வெருவந்த செய்(து)ஒழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும் — 563.

If a king continuously does frightful deeds with cruel sceptre, he with meet with a speedy and certain fall.

குடிமக்களை அச்சப்படுத்தி மிகுதியாகத் துன்புறுத்தும் அரசன் உறுதியாக ஒரு சேரக் கெடுவான்.

வெருவந்த செய்தல் — வெருக்கு வெருக்கென அஞ்சி நடுங்கும்படி செயல் ஆற்றுதல்.

## 58. கண்ணோட்டம்

## Benign Look

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்(து)இவ் வுலகு — 578

To those who can be gracious without spoiling the actions, this world duly belongs.

நீதி வழங்குதலாகிய தம் தொழில் அழியாமல் மக்களிடம் அன்பு காட்டி எண்ணிய இனிது முடிக்கும் ஆற்றல் பெற்றவர்க்கு உலகம் உரிமையுடையது.

கண்ணோட்டம் < கண் + ஓட்டம்
கண் + நோட்டம்
= முகத்தாட்சண்யம்(வ)

---

எல்லா நாட்டினருக்கும் எல்லா மதத்தினருக்கும் எல்லாக் கொள்கையினருக்கும் இன்றியமையாத வாழ்க்கை ஒழுக்கங்களை மிகவும் தெளிவாக எடுத்துக்கூறும் பெருமை வாய்ந்தது இந்நூல்.

— உ. வே. சா.

---

## 59. ஒற்றாடல்

## Espionage

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்(று)ஆங்கு
அனைவரையும் ஆராய்வ(து) ஒற்று — 584

Espionage envisages deliberation of watching the king's employees, his kinsmen, his enemies and all people.

*தம் செயல் செய்வார், சுற்றத்தார், பகைவர் என்று சொல்லப்பட்ட அனைவரையும் சொல்லாலும், செயலாலும் ஆராய்பவனே ஒற்றனாவான்.*

*ஒற்று — ஒன்றுதல் என்பதன் வலித்தல்; தான் கொண்ட வேடத்தோடு ஒன்றிப் போய் ஐயுறாத வகையில் புலனாய்வு செய்பவர்.*

## 60. ஊக்கம் உடைமை

## Possession of a Powerful Will

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்; அசைவிலா
ஊக்கம் உடையான் உழை — 594

Good fortune will enquire the way to enter the home of a person of unshakeble powerful will.

*சோம்பல் இல்லாத ஊக்கத்தை உடையவனிடம் செல்வம் வழிகேட்டுச் சென்றடையும்; செல்வம் பெருகி வளரும்.*

*ஊக்கம் — வினை செய்தற்கண் தோன்றும் விழுமிய மன எழுச்சி.*

---

*திருக்குறளை முழுமையாகப் பயின்றவரிடம் அறிவியல் கண்ணோட்டம் இயல்பாகவே அமைந்துவிடும்*

*—அழகரடிகள்*

## 61. மடி இன்மை

## Absence of Sloth

குடிஎன்னும் குன்றா விளக்கம் மடி என்னும்
மா(சு)ஊர மாய்ந்து கெடும் — 601

By the spreading blemish of idleness, the quenchless lamp of ancestry will go out and be extinguished.

தான் பிறந்த குடி என்னும் அணையாத விளக்கு சோம்பல் என்னும் குற்றம் தோன்ற கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து அணைந்துவிடும்.

மடி — வினையைத் தொடராமல், தொடங்கிய இடத்திற்கே மீண்டும் திரும்பிவிடுதல்.

## 62. ஆள்வினை உடைமை

## Possession of Manly Exertion

பொறிஇன்மை யார்க்கும் பழி அன்(று) அறிவறிந்(து)
ஆள்வினை இன்மை பழி — 618

It is no disgrace not to have one's luck for anyone but to be without manly effort based on right knowledge is disgraceful.

ஊழ் இன்மை அல்லது உறுப்புக் குறைபாடு உடைமை யாருக்கும் பழியாகாது; ஆனால், அறிய வேண்டுவனவற்றை அறிந்து செய்யவேண்டிய செயலைச் செய்யாதிருப்பது பழியாகும்.

ஆள்வினை-ஓர் ஆள் தன் முழுத்திறத்தையும், ஆற்றலையும் ஈடுபடுத்திச் செய்யும் செயல்.

---

*திருக்குறளைவிட உயர்ந்தநூல் இல்லை;*
*திருவள்ளுவரை விடச் சிறந்த ஆசிரியர் இல்லை.*

— குன்றக்குடி அடிகளார்

## 63 இடுக்கண் அழியாமை

## Avoidance of Succumbing to Adversity

மடுத்தவாய் எல்லாம் பகு(டு) அன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா(டு) உடைத்து — 624

As a bullock pushes its way through uneven tracks, so also before such a man obstacles meet with destruction.

தடை உண்டான இடத்தில் எல்லாம் பலத்தோடு கால் ஊன்றி இழுக்கும்படியான காளையைப் போல துன்பம் வந்த காலத்தில் தளராது மேற்கொண்ட செயலைச் செய்பவனை அடையும் துன்பமானது தானே துன்பப்பட்டு நீங்கிவிடும்.

இடுக்கண்—கடுந்துன்பம்

அழிதல் — மனம் உடைந்து, கிடந்து ஒழிதல்.

## 64. அமைச்சு

## Ministership

வன்கண் குடிகாத்தல் கற்(று) அறிதல் ஆள்வினையோ(டு)
ஐந்துடன் மாண்ட(து) அமைச்சு — 632

Steadfastness, protection of the subjects, learning, wisdom and manly effor are the five which make up grand ministership.

செய்யும் செயலில் உறுதியுடையவனாதலும் குடிமக்களுக்குத் தீமைவராது பாதுகாத்தலும், நூலறிவோடு நுண்ணறிவு பெற்றிருத்தலும், செயலை ஆளும் திறமையுடையவனாதலும் ஆகிய ஐந்தும் உடையவனே சிறந்த அமைச்சன் ஆவான்.
அமைச்சன் — அரசியல் வினைகளைச் சூழ்ந்து அமைப்பவன்.

---

வள்ளுவப்பேர் எம்ஐயன் வாய்மொழியும் மாமடியும்
உள்ள இனிக்கும் உளம்.

— கவிராச பண்டிதர்

---

## 65. சொல்வன்மை

## Power of Speech

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து — 645

Speak such words, making sure that the word of none other can refute your own.

தாம் சொல்ல விரும்பிய சொல்லை வெல்ல வல்லதாய பிறிதோர் சொல் இல்லாமையை அறிந்து அச்சொல்லைச் சொல்லுதல் வேண்டும்.

சொல் — நெல் ; உள்ளீடு கொண்டது ; பொருள் பொதிந்த கிளவி பயனில் சொல் — பதர் ; உள்ளீடு அற்றது.

## 66. வினைத்தூய்மை

## Purity In Action

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை — 656

Though you find your mother starving do not do what will be condemned by the great.

தன்னைப் பெற்ற தாயினது பசித்துன்பத்தைக் கண்டு வருந்த நேரிட்டாலும் அறிவுடைய சான்றோர்கள் பழிக்கும் செயல்களைச் செய்யாதிருத்தல் நல்லது.

---

தேடுகின்ற உண்மை யாவும்
ஓடிவந்து நிற்குமே
தெய்வ வாக்கு வள்ளுவர்
திருக்குறள் கற்கவே.

— நாமக்கல் கவிஞர்

## 67. வினைத்திட்பம்

## Executive Ability

**எண்ணிய எண்ணியாங்(கு) எய்துப! எண்ணியார்**
**திண்ணியர் ஆகப் பெறின் — 666**

Any plan shall be achieved as planned provided the planner had the strongest will power.

*செயலைச் செய்ய எண்ணியவர், அச்செயலைச் செய்வதில் உறுதியுடையவராக விளங்கினால், எண்ணிய செயல்களை எண்ணியவாறே செய்து முடிப்பர்.*

*வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்.*
*— குறுந்தொகை (135)*

## 68. வினைசெயல் வகை

## Effective Ways of Execution

**முடிவும் இடையூறும் முற்றியாங்(கு) எய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல் – 676**

Consider the aim, the obstacle and the greatness of the ultimate gain and then resort to action.

*நாம் செயலைச் செய்யும்போது, அது முடிவதற்கான முயற்சியும், இடையில் தோன்றும் இடையூறுகளையும் முடிவில் உண்டாகும் பயன்களையும் ஆராய்ந்தறிந்து செய்தல் வேண்டும்.*

---

*உலகில் பல பெயரிட்டு அழைக்கப்படும் ஒரே அறிஞர் திருவள்ளுவரைத் தவிர வேறு யாரும் இல்லை; உலகில் பல பெயரிட்டு அழைக்கப்படும் ஒரே நூல் திருக்குறளைத் தவிர வேறு ஏதும் இல்லை.*

---

## 69. தூது

## On Envoys and Ambassadorship

**தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி**
**நன்றி பயப்பதாம் தூது — 685**

An ambassador is one who briefly speaks, avoids useless words, talks plesantly and thus gains good for his King.

*சொல்ல வேண்டிய பொருளை வரிசைப்படுத்தித் தொகுத்துச் சொல்லி தீமை விளைக்கும் சொற்களை நீக்கி, மாற்றரசனுக்கும் மகிழ்ச்சி தரக்கூடிய வகையில் சொல்லித் தன்னரசனுக்கு நன்மை செய்பவனே தூதனாவான்.*

*தான் அறிந்து கூறும் தலை மற்றுஇடை அது கோன் அறைந்தது ஈதென்று கூறுமால் — தானழியாது ஓலையே காட்டும் கடை என்று ஒரு மூன்று மேலையோர் தூதுரைத்தவாறு.*
— புறத்திரட்டு வெண்பா (38)

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

## Behaviour in a King's presence

**அகலா(து) அணுகாது தீக்காய்வார் போல்க !**
**இகல்வேந்தர்ச் சேர்ந்(து)ஒழுகு வார் — 691**

Who warm themselves at the fire would neither draw too close nor go too far; thus should servants of capricious kings also.

*அரசரோடு நெருங்கிப் பழகுபவர்கள், மன்னரிடமிருந்து மிகவும் விலகாமலும் மிகவும் நெருங்காமலும் குளிர்காய்வார் போலப் பழகவேண்டும்.*

---

தெய்வப் புலவருக்கு வழங்கும் பல பெயர்கள் : *திருவள்ளுவர்,* தேவர், நாயனார், முதற்பாவலர், நான்முகனார், மாதானுபங்கி, செந்நாப்போதார், பெருநாவலர், பொய்யில் புலவர்.

---

## 71. குறிப்பு அறிதல்

## Divining the Intentions Thought Reading

**குறிப்பின் குறிப்(பு)உணர் வாரை உறுப்பினுள்**
**யாது கொடுத்தும் கொளல் — 703**

By giving any one of your parts, one should secure the person who can infer even when there is no scope for inference.

*பிறர் மனத்தில் உள்ள எண்ணங்களை ஐயமற குறிப்பால் அறிந்து கொள்பவரைத் தன் உறுப்புக்களில் எதைக் கொடுத்தாகிலும் தமக்குத் துணையாகக் கொள்ள வேண்டும்.*

*'குறிப்பு அறிய மாட்டாதவன் நன்மரம்' — வாக்குண்டாம், (13)*

## 72. அவை அறிதல்

## Judging the Audience

**அவையறிந்(து) ஆராய்ந்து சொல்லுக சொல்லின்**
**தொகைஅறிந்த தூய்மை யவர் — 711**

Let men of purity well versed with vocabulary assess the assembly and address it with discretion.

*சொல்லின் திறங்களை நன்றாக உணர்ந்த பெரியோர்கள், பல்வேறு வகைப்பட்ட அறிஞர்கள் நிறைந்த அவையினை அறிந்து ஏற்றவாறு ஆராய்ந்து சொல்ல வேண்டும்.*

---

*திருக்குறளுக்கு வழங்கும் பல பெயர்கள் :*

*திருக்குறள், முப்பால், உத்தரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர், பொருளுரை, பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து, தமிழ்மறை, பொதுமறை, திருவள்ளுவப்பயன், முதுமொழி.*

---

## 73. அவை அஞ்சாமை

## Nervousness in Assembly

உளர்எனினும் இல்லாரொ(டு) ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார் — 730

Men who cannot speak convincingly of what they learnt owing to fear of the assembly, though alive, are like the dead.

சான்றோர் நிறைந்த அவைக்கு அஞ்சித் தாம் கற்றவற்றை அதற்கேற்ப சொல்லமாட்டாதவர் உயிர் வாழ்ந்தாலும் இறந்தவராகவே கருதப்படுவர்.

அஞ்சுதல் — விதிர்விதிர்த்து மெய் நடுங்கி வாய் குளறி நடுநடுங்கி ஒடுங்குதல்.

## 74. நாடு

## The Nation

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா(து) இயல்வது நாடு—734

A kingdom is that which continues to be free from excessive starvation, incurable discase and destructive foes.

வருத்துகின்ற பசியும் நீங்காத நோயும் தொல்லை கொடுக்கின்ற பகையும் இல்லாது எல்லா வளங்களாலும் வளர்ச்சி பெறுவதே நாடாகும்.

நாடு — மக்கள் விரும்பிச் சென்று வாழத் தகுதி நிரம்பிய தேசம்.

---

வள்ளுவர்செய் திருக்குறளை
மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி
ஒருகுலத்துக் கொருநீதி

— பேராசிரியர் சுந்தரம்பிள்ளை

## 75. அரண்

## Fortifications

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண் — 741

The sea with pearl like wealth, open space, the mountains and shade of beauteous forest are the features of a fort.

முத்துக்கள் போன்ற உயர்ந்த பொருள்களைக் கொண்ட கடலும் வெளிநிலமும் உயர்ந்த மலையும் அழகைத் தரும்படியான நிழலைக் கொடுக்கும் காடும் சூழ அமைந்து இருப்பதே நாட்டிற்கு அரணாகும்.

அரண் நாட்டையும், மக்களையும் பகைவரிடமிருந்து பாதுகாக்க உதவும் புறத்தடுப்புகள்.

## 76. பொருள் செயல் வகை

## Ways of Producing Wealth

செய்க பொருளைச் செறுநர் செருக்(கு)அறுக்கும்
எஃ(கு)அதனிற் கூரிய(து)இல் — 759

Let riches be gathered, for it is the weapon that cuts through the pride of foes and there is nothing sharper.

பொருளானது பகைவரின் பகையை அழிக்கும் வாளைப் போன்றது. அந்தப் பொருளினும் சிறந்த கூர்மையான படை வேறெதுவும் இல்லை. ஆதலால் பொருளைச் செய்தல்வேண்டும்.

---

What a difference between the Kural and the Laws of Manu!

— Dr. Albert Schweitzer

## 77. படைமாட்சி

## The grandeur of the Army

**அழி(வு)இன்று அறைபோகா(து) ஆகி வழிவந்த**
**வன்க ணதுவே படை — 764**

That alone is the army which knows no destruction which resists sabotage and which has a long tradition of valour.

பகையால் அழியாது போர்புரியக் கூடியவராகவும் வீரப்பரம்பரையில் தோன்றியவராகவும் உள்ள திறமை பெற்றவரே நல்ல படையினராவார்.

அறைபோதல் — கீழறுப்புக்கு எளிதாதல்

## 78. படைச் செருக்கு

## The fride of the Army

**கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும் — 774**

A hero who had lost his lance alongwith an elephant, plucks out a lance from off his body smiles, with thrilling success.

தன்னை எதிர்த்து வந்த ஆண்யானையின் மேல் தன் கை வேலைச் செலுத்தி, தன்மேல் வருகின்ற ஆண்யானையை வீழ்த்த வேலைத்தேடித்திரிபவன், தன்மார்பின்கண் உள்ள வேலைக் கண்டு பறித்து மகிழ்வான்.

---

கி. மு. 31-ல் திருவள்ளுவர் விண்ணுலகு அடைந்தார் எனும் மரபுவழிச் செய்தியின் அடிப்படையில் அவ்வாண்டினை முதலாகக் கொண்டு திருவள்ளுவர் ஆண்டு கணக்கிடப்படுகிறது.

## 79. நட்பு

## Friendship

**நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு — 783**

Like the new excellences found on each reading of a good book, so does friendship when continuously built with cultured persons.

நூற்பொருளைக் கற்குந்தோறும் கற்பவர்க்கு இன்பம் செய்தலைப்போல நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்புப் பழகுந்தோறும் இன்பம் செய்யும்.

நள் — நெருங்குதல்.

நள் + பு = நட்பு ; நெருங்கிப் பழகி மனம் ஒன்றி இருக்கும் இயல்பு.

## 80. நட்பு ஆராய்தல்

## Deliberating on friendship

**அழச்சொல்லி அல்ல(து) இடித்து வழக்(கு)அறிய**
**வல்லார்நட்(பு) ஆய்ந்து கொளல் — 795**

Search and accept the friendship of those who reprove evil, whose words make you weep and who are able to recognise the customs.

தீமை கண்டபொழுது அழச்சொல்லியும் தீமைவராதபடி இடித்துரைத்தும் உலகியல்புகளை அறிந்து நல்வழிப்படுத்த வல்ல நல்லவரது நட்பை ஆராய்ந்து கொள்ளல் வேண்டும்.

---

திருக்குறள் தனிமனித ஒழுக்கத்தை வரையறை செய்து கொண்டு, மேலே அரசியல் பொருளியல் அகத்துறை இன்பங்களை வரையறை செய்கிறது.

---

## 81. பழைமை

## Familiarity

**பழைமை எனப்படுவ(து) யா(து)எனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு — 801**

What is meant by intimacy of friendship? It is one which does not repulse all liberties,

நட்பின் மிகுதியால் உரிமை பாராட்டிச் செய்வதை எந்தக் காரணத்தினாலும் தள்ளிவிடாமல் ஏற்றுக்கொள்வதுதான் பழமையாகும்.

*நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை*
*அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்*
*நெல்லுக்(கு) உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு*
*புல்லிதழ் பூவிற்கும் உண்டு — நாலடியார் (221)*

## 82. தீ நட்பு

## Friendship with the Wicked

**கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு — 819**

The association of those who say one thing and do another is certainly injurious even in the dream state.

செயல்வேறு சொல்வேறு உள்ளவரது தொடர்பானது கனவில் நினைத்த அளவில் கூடக் கொடுமையானதாக இருக்கும்.

---

சமயஞ்சாராத நூல்களுள் நிறைய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள நூல் திருக்குறள் ஒன்றே.

---

## 83. கூடா நட்பு

## Unmatching Friendship

**மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்**
**சொல்லினால் தேறற்பாற்(று) அன்று — 825**

Of those whose minds are not settled, notwithstanding the affair, it is not proper to rely on their words.

உள்ளத்தோடு பொருந்தி நட்புக் கொள்ளாதவரை எந்தக் காலத்தும், சொல்லும் சொல்லைக் கொண்டு நட்பாகக் கொள்ளுதல் கூடாது.

கூடா நட்பு — பொருந்தாத நட்பு.

## 84. பேதைமை

## Folly

**நாணாமை நாடாமை நாரின்மை யா(து)ஒன்றும்**
**பேணாமை பேதை தொழில் — 833**

Shamelessness, want of critical spirit, lack of binding love and gross negligence are the career of a fool.

இழி செயல்களுக்கு வெட்கப்படாமையும் எதனையும் ஆராய்ந்து செய்யாமையும், தனக்கு நன்மை செய்தாரை நட்பாகக் கொள்ளாமையும், தனக்கு நன்மை பயப்பனவற்றைக் கடைப்பிடிக்காமையும் ஆகிய நான்கு செயல்களும் அறியாமையுடையார் செயல்களாகும்.

---

*1000 ஆண்டுகள் மறைக்கப்பட்ட அரியநூல் திருக்குறள். பரிமேலழகர் உரையெழுதிய பின்னரே (கி. பி. 12-ம் நூற்றாண்டு) பரவியது.*

---

## 85. புல்லறிவாண்மை

## Strength of Low Level Knowledge

**ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்**
**போஒம் அளவு(ம்)ஓர் நோய் — 848.**

Directed he acts not ; by himself knows nothing wise; such man's whole life is an incurable disease till his last breath.

பெரியோர்கள் கூறும் உறுதிமொழிகளையும் கேட்டு நடக்க மாட்டான் ; தானாகவும் ஆராய்ந்து செயல் செய்ய மாட்டான். அத்தகையவன் உலகத்துக்கு இறக்கும் வரையிலும் ஒப்பற்ற நோய்போல் இருந்து துன்பம் செய்வான்.

புல்லறிவு — புல்லைப் போன்று உற்று அறியும் ஒரே அறிவு; உற்று அறியும் (குறள் - 1101) காமவின்ப அறிவு மட்டும். ஏனைய ஐந்து அறிவுகள் அற்றிருத்தல்.

## 86. இகல்

## Hostility

**இகலிற்(கு) எதிர்சாய்தல் ஆக்கம் அதனை**
**மிக(ல்)ஊக்கின் ஊக்குமாம் கேடு — 858**

To relent diplomatically against hatred will yield wealth ; whereas indulging in its increase will hasten ruin.

பகைமைக்கு இடங்கொடாமல் சாய்ந்து ஒழுகுவது ஒருவனுக்கு வளர்ச்சியைக் கொடுக்கும். அப்பகையை வளர்த்துக் கொள்வதால் கேடு வந்து துன்புறுத்தும்.

இகல் — மனவேறுபாடு ; மனஸ்தாபம் (வ)

---

நூலாசிரியன் கருத்தை வெளிப்படுத்துவதே உரையின் ஒழுக்கம். தன் கருத்தை இன்னொருவர் நூலில் ஏற்றிக் கூறுவது உரை வழுவாகும்.

---

## 87. பகை மாட்சி

## The Characteristics of Enmity

**வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்**
**பண்பிலன் பற்றார்க்(கு) இனிது — 865**

One who does not look into ways and means, wastes useful opportunities, dreads no shame and is uncultured becomes a pleasing object to his foes.

*பகை வந்த வழியை அறியாமலும், அதைத் தடுக்கும் வாய்ப்புக்களைப் பெறாமலும், பழிக்கு அஞ்சாமலும், உயர்ந்த நற்குணங்கள் இல்லாமலும் பகைமேற் சென்றால் அவனைப் பகைவன் எளிதில் வென்றுவிடுவான்.*

## 88. பகைத்திறம் தெரிதல்

## Appraisal of an Enemy's Strength

**தன்துணை இன்றால் பகைஇரண்டால் தா(ன்)ஒருவன்**
**இன்துணையாக் கொள்க(அ)வற்றின் ஒன்று — 875**

One who has no ally but a couple of foes must befriend one of them.

*தனக்கு உதவிசெய்யும் துணை இல்லாதபோது, தோன்றியுள்ள இரண்டு பகைகளில் ஒன்றைத் தனக்குத் துணையாகக் கொண்டு செயலில் வெற்றி பெறுதல் வேண்டும்*

---

*சொற்பிரிப்பும், கருத்துப் பிரிப்பும், சொல்லுக்குப் பொருளும் பொருளுக்கு மரபும், மரபுக்குக் காட்டும், முன்னுரை மறுப்பும் தன்னுரைப் பொருத்தமும், பொருந்த வரலாறும் எனப் பல கூறுகளைக் கொண்டதே சரியான உரையாகும்.*

---

## 89. உட்பகை

## Internal Enmity

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உள்பகை உற்ற குடி — 887

A race divided by internal strife will never unite, like the oneness of a casket and its own lid.

செப்பினது மூடி பொருத்தமாகக் கூடியிருந்தாலும் பொருந்தாமல் இருப்பதுபோல மனத்தில் பகைகொண்டவன் பிரிக்கமுடியாத அளவு கூடியிருந்தாலும் சமயத்தில் பிரிந்து விடுவான்.

## 90. பெரியாரைப் பிழையாமை

## Avoidance of offending the Great

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும் – 899

If men of lofty goals burst into a rage, even a king will fall from his place and lose his sovereignty.

உயர்ந்த கொள்கைகளையுடைய நல்லோர் சினம் கொள்வாரானால், பெருஞ்சிறப்புடைய வேந்தனும், இடையில் அரசாட்சியோடு அழிவான்.

---

திருக்குறளின் அதிகார வைப்பு முறைக்குக் காரணம் காட்டி உரை எழுதியவர் பரிமேலழகர்; குறள் வைப்பு முறைக்குக் காரணம் காட்டி உரை எழுதியவர் நாமக்கல் கவிஞர்; இன்பத்துப்பால் குறள் வைப்பு முறைக்கு மட்டும் காரணம் காட்டி உரை எழுதியவர் இலக்குவனார்.

---

## 91. பெண்வழிச் சேறல்

## On Being Led by Women

**அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ஏவல் செய்வார்கண் இல் — 909**

No virtuous deed, nor enormous wealth, nor other activities rest with those who are at the beck and call of the maid.

*அறச் செயலும். நிறைந்த பொருளும்,பிற இன்பச் செயலும் பெண்வழி ஏவல் செய்வாரிடம் உண்டாகாது.*

## 92. வரைவின் மகளிர்

## Wanton Women

**பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீ(இ) அற்று — 913.**

The false embrace of a greedy harlot is like embracing some unknown corpse in a dark room.

*விலைமகளது அருவருப்போடு கூடிய அன்பில்லாத பொய்ம்மையான முயக்கம் இருள் சூழ்ந்த இடத்தில் தொடர்பில்லாத பிணத்தைத் தழுவியதற்கு நிகராகும்.*

---

*திருக்குறள் உரை வகைகள் — சொற்றொடர் உரை, பொழிப்புரை, கருத்துரை, குறிப்புரை, சிற்றுரை, விரிவுரை, விளக்கவுரை, அகலஉரை, ஆய்வுரை, மேற்கோள்உரை, ஒப்புரை, ஓவியஉரை, பாவியஉரை, நயஉரை, நாடகஉரை, பேர்உரை, மெய்ப்பொருள்உரை, தொகுப்புரை, கதைஉரை, கற்பனைஉரை, விளக்கவுரை, வாழ்வியல் உரை என நீளும்.*

---

## 93. கள் உண்ணாமை

## Avoidance of Taking Liquor

**உண்ணற்க கள்ளை ; உணி(ல்)உண்க ; சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார் — 922**

Let no one drink liquor ; If drink is desired, let them drink who do not seek the esteem of the examplory good men.

*அறிவை மயக்கும்படியான கள்ளை உண்ணாதே ! அப்படி உண்டால் அறிவு ஒழுக்கங்களால் சிறந்த பெரியோரால் நன்கு மதிக்கப்படமாட்டாய் !*

## 94. சூது

## Gambling

**வேண்டற்க வென்றிடினும் சூதினை ; வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று — 931**

Desire not gambling though you win; for your gain is as the baited iron-hook which the fish swallows.

*தான் வெல்லும் ஆற்றலுடையவனாயினும் சூதாடலை விரும்பாதே. வென்று பொருள் பெறுதல் உணவால் மறைந்த தூண்டிலிரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கியதைப் போன்றதாகும்.*

---

*திருவள்ளுவர், கருத்துகளை எடுத்து மொழியும் முறைகளோ எண்ணிறந்தவை. அவற்றுள் சில : அழகுறக் கூறல், அச்சுறுத்தல், ஆக்கங்கூறல், இனிக்கச் சொல்லல், ஈட்டியெனப் பாய்தல், உள்ளம் தொடுதல், ஊக்கப்படுத்தல், எளிமைப் படுத்தல், ஏசி உரைத்தல், ஐயம் அகற்றல், ஒப்புரவு காட்டுதல், ஒட்டிப் பேசல், ஓங்கி அடித்தல், கெஞ்சுதல், விஞ்சுதல், சிந்திக்கத் தூண்டுதல், சினந்துரைத்தல், மாற்று வழி கூறல், மறுத்துப் பேசுதல், வியப்பூட்டல், விட்டுக்கொடுத்தல்.*

## 95. மருந்து

## Medicine

**மருந்(து) என வேண்டாவாம் யாக்கைக்(கு) அருந்திய(து)
அற்றது போற்றி உணின் — 942**

No medicine is needed to ones' body if one eats after ensuring that the food already consumed is fully digested and waste excreted.

*முன் உண்ட உணவை அறிந்து, அவ்வுணவு செறித்ததா என்பதை அறிந்து, இனி உண்ண வேண்டிய உணவை அளவோடு உண்பவனுடைய உடலுக்கு மருந்து என்பது வேண்டுவதில்லை.*

## 96. குடிமை

## Nobilty of Descent

**வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று — 955**

Men of ancient race do not discard their noble nature when their means of benefaction have gone down.

*வழக்கமாகச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யமுடியாத காலத்தும், நல்ல பழமையான பரம்பரையில் தோன்றிய பெருமக்கள் தனக்குரிய பண்பிலிருந்து ஒருபோதும் நீங்க மாட்டார்கள்.*

---

*தலைப்பூ போல் அதிகாரத்தலைப்புகள் பல திறத்தன—ஒரு சொல்தலைப்பு, இருசொல்தலைப்பு தொடராக அமைந்த தலைப்பு உடன்பாட்டுத்தலைப்பு, எதிர்மறைத்தலைப்பு, கருத்து விளக்கத் தலைப்பு.*

---

## 97. மானம்

## Maintenance of one's Status

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு(து) ஏத்தும் உலகு — 970

Behold the noble who refuse to live on dishonour comes-the world would worship all their brilliant glory praising much.

தம்நிலைக்குத் தாழ்வு நேர்ந்த காலத்து மானத்தைக் காத்து உயிர் நீத்தவரது பெருமையை உலகத்து மக்கள் வணங்கிப் புகழ்ந்து பேசுவார்கள்.

மானம் — தன்நிலையில் தாழாமை.

மானம் — அளவு (ஓ. நோ : வருமானம்) அளவோடு வாழ்வதால் வரும் நிலைத்த மதிப்பு.

## 98. பெருமை

## Greatness

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல் — 975

The men endowed with greatness will do in proper ways the rarest deed.

தம் வாழ்நாளில் பிறரால் செய்ய முடியாத அருமையான செயல்களைப் பெருமையுடைவர்கள் செய்து முடிப்பர்.

---

முதன் முதலாக பொதுமக்கட்காக திருக்குறள் வகுப்பு நடத்தச் செய்த பெருமை வள்ளலாரைச் சேரும். முதன்முதலாக திருக்குறள் மாநாடு நடத்திய பெருமை பெரியாரைச் சேரும்.

---

## 99. சான்றாண்மை

## Examplary Character

கட(ன்) என்ப நல்லவை எல்லாம் கட(ன்)அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு — 981

They say that all good things are natural for them who know what is proper and seek perfection.

தமக்குத் தகுதியானது இதுவென்றறிந்து சான்றாண்மையை மேற்கொண்டு வாழ்பவர்க்கு நல்ல குணங்கள் எல்லாம் இயல்பாய் அமையும் என்று நூலோர் கூறுவர்.

சான்றாண்மை — நிறைவான குணங்கள் அனைத்தையும் ஆளுந்தன்மை.

## 100. பண்பு உடைமை

## Possession of Nobility

பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன் — 996

The world exists because of the cultured souls but for them all this harmony would be certainly buried in the dust.

பண்புடையவர்கள் வாழ்வதால்தான் உலகியல் என்றும் இயங்கி வருகிறது. அப்பண்பு உடையவர் இல்லாது போனால் உலகியல் மண்ணின்கண் புக்கு மாய்ந்து அழிந்து போகும்.
பண்பு — பண்(இராகம்) போன்று பதப்பட்ட படிம நல்லியல்புகள்.

---

தமிழ் இறைவனாரின் திருக்குறள்.

— பாவேந்தர்

---

## 101. நன்றி இல் செல்வம்

### Wealth Without Worthy Use

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்(கு) அடுக்கிய
கோடி உண்டாயினும் இல் — 1005

Behold the men that neither give unto others nor enjoy their wealth themselves ; even if they own crores piled on crores.

பிறருக்குக் கொடுத்து உதவாது, தானும் துய்த்து உணராதவர் தேடிய பலவாக நிறைந்த கோடிப் பொருள்கள் இருந்தும் அதனால் எந்தவித பயனும் பெறமாட்டார்.

## 102. நாண் உடைமை

### Possession of Modesty

ஊண்உடை எச்சம் உயிர்க்(கு)எல்லாம் வேறல்ல
நாண்உடைமை மாந்தர் சிறப்பு — 1012

Food, clothing and the rest for all living beings are not different. The specific feature of the good men is their possession of modesty.

உணவு, உடை, செல்வம், கல்வி, அறிவு போன்ற பிற பொருள்கள் எல்லா மனித உயிர்களுக்கு எல்லாம் பொதுவானவை. ஆனால், பிறர் பழிக்கு அஞ்சி வாழும் செயல் மட்டும் மனிதர்களுக்குச் சிறப்பான குணமாகும்.

நாண் — பழி, தீவினைகட்கு அஞ்சி, உள் அழுங்கி, ஒடுங்கி நிற்கும் இயல்பு.

---

குறிக்கோள் வாழ்வின் இலக்கணங்களை அறிவிப்பதால் திருக்குறளை இலக்கிய இலக்கணம் எனக் குறிப்பிடலாம்.

---

## 103. குடிசெயல் வகை

## Ways of Promoting Racial Welfare

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு — 1025

One who leads an unblemished life and upon advancing his family aud the race will be surrounded as kith and kin by the world.

முயற்சியின்மையும் அறிவின்மையும் ஆகிய குற்றங்கள் இல்லாமல், குடிப்பெருமையை உயரச் செய்து வாழ்பவனை உலகத்தார் எல்லாரும் தம் சுற்றமாக எண்ணி சூழ்ந்து கொள்வர்.

குடி — குடும்பம் முதல் நாட்டினம் ஈறாகக் குறிக்கும், பொருள் விரிந்த சொல்.

## 104. உழவு

## Agriculture

உழு(து)உண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றுஎல்லாம்
தொழு(து)உண்டு பின்செல் பவர் — 1033

They alone live who p'ough and eat ; the rest bow and follow the former

உலகில் உழவுத் தொழில் செய்து வாழ்பவர்தான் உண்மையாக வாழ்பவராவார். பிற தொழில்களைச் செய்பவர் எல்லாரும் உழுது வாழ்பவரை எதிர்பார்த்து வாழ்பவராவார்.

---

தெய்வப் புலமைத் திருவள்ளுவர்.

— உமாபதிசிவம்

---

## 105. நல்குரவு

### Poverty

அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும் — 1047

Poverty, unmixed with virtue will make the mother who gave him birth, to view as a stranger.

அறத்தொடு படாத வறுமையுடையவனை பெற்றெடுத்த தாயும் தன் மகனாகக் கருதமாட்டாள்.

## 106. இரவு

### Mendicancy

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு — 1054

Begging is like giving alms, if sought from those giving alms, of those who would hide nothing even in dreams.

பொருளை மறைத்து வைக்கவேண்டுமென்று கனவிலும் நினைக்காதவர்களிடம் இரத்தல், ஏழைகளுக்கு ஒரு பொருளை வழங்குவது எவ்வளவு இன்பத்தைக் கொடுக்குமோ அவ்வளவு இன்பத்தைக் கொடுக்கும்.

இரவு-தன் நிலையினின்றும் இழிந்து, பிறரிடம் உள்ளவற்றைக் கெஞ்சி, இலவயமாகப் பெறுதல்; இதற்கு எதிரானது இரவல் (இரவு அல்)

---

இந்திய மொழி இலக்கியத்தில் உள்ள திருக்குறளைத் தெரியாதவர்கள் அறிஞர்கள் என்று சொல்லத்தகுதியில்லாதவர்கள்.

— காந்தியடிகள்

---

## 107. இரவு அச்சம்

## Dread Of Mendicancy

கரவா(து) உவந்(து)ஈயும் கண்அன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும் — 1061

Even from those, who are as precious as theirs eyes, who would not conceal but give gladly, non-begging is worth a crore.

பொருளை மறைக்காமல் மகிழ்ச்சியோடு கொடுக்கும் கண் போன்றவர்களிடத்தும் இரவாமல் இருப்பது கோடி மடங்கு உயர்வைத் தரும்.

## 108. கயமை

## Meanness

எற்றிற்(கு) உரியர் ? கயவ(ர்) ஒன்று உற்றக்கால்
விற்றற்(கு) உரியர் விரைந்து — 1080.

What use is of base men ? When occasion arises, they hasten to sell themselves. eg. Bonded labourer.

கயவர் துன்பம் வந்தபோது அத்துன்பத்திற்கு அஞ்சி, அத்துன்பத்தைப் போக்கிக்கொள்ளத் தம்மையும் விற்று அடிமையாவர். அதுவன்றி வேறு எத்தொழிலுக்கும் உரியவராகார்; இவர் கொத்தடிமையர்.

---

அவனே புலவன் அவனே அறிஞன்
அவனே தமிழை அறிந்தோன் — சிவனறிய
வள்ளுவ தேவர் வசனத்தை மெய்யாக
உள்ளுவ தேவன் உளன்.

— பெருந்தொகை

# III இன்பத்துப் பால் - On Love

## 109 தகையணங்கு உறுத்தல்

## Glare of Rapturous Beauty

**நோக்கினாள் நோக்(கு)எதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக்கொண்(டு) அன்னது உடைத்து — 1082**

While she reciprocates my look with her own glace, she looks like a fighting angel supported with a band of army.

வனப்பினை உடைய இப்பெண் என் நோக்கிற்கு எதிர் நோக்குதல், தானே தாக்கி வருத்தும்படியான தெய்வப்பெண் தாக்குவதற்குப் படையையும் கொண்டு வந்தாற் போலும் தன்மையுடைத்து.

அணங்கு-மோகினி(வ)-கட்டழகால் மயக்கி வருத்தும் பெண்.

## 110. குறிப்பு அறிதல்

## Divining the Intentions

**செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்**
**உறாஅர்போன்று உற்றார் குறிப்பு — 1097**

Non - hostile cryptic words and unfriendly look of anger are signs of those who love but would conceal it.

உள்ளத்துப் பகைமை இல்லாத கடுமையான சொல்லும், பகைவரைப் போன்ற பார்வையும் தொடர்பு இல்லாதவரைப் போலப் பிறருக்குக் காணப்பட்டாலும் அவை நெருங்கி உறவு உள்ளம் கொண்டவரது குறிப்பாகும்.

---

நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின் — பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்.

— ஔவையார்

---

## 111. புணர்ச்சி மகிழ்தல்

## Elation on Union

**தம்இல் இருந்து தமதுபாத்(து) உண்டற்றால்**
**அம்மா அரிவை முயக்கு — 1107**

The embrace bliss of this fair maid is like the joy of one who lives in own house and shares his meal with all.

*இல்லற வாழ்க்கையிலிருந்து, நல்வழியில் ஈட்டிய பொருளைப் பிறருக்குக் கொடுத்துத் தாமும் துய்த்து இன்புறுவது போல இந்தப் பெண்ணின் கூட்டுறவு இன்பமாக இருந்தது! என்னே வியப்பு?*

*புணர்ச்சி — மாறுபட்ட பாலினர் மகிழ்ந்து உடலுறவு கொள்ளுதல்.*

*சிருங்காரம் (வ) — காமக்களியாட்டம்.*

## 112. நலம் புனைந்து உரைத்தல்

## Grace and Elegance Extolled

**முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்**
**வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு — 1113**

Behold the bamboo-shouldered maid — she smells fragrant; her teeth are pearls; and dyed-eyes, dart like too.

*இந்தப் பெண்ணின் நல்லாளுக்குத் தளிரே மேனியாகவும், முத்துக்களே பற்களாகவும், இயற்கை மணமே நாற்றமாகவும், வேலே மையுண்ட கண்களாகவும் மூங்கிலே தோளாகவும் அமைந்தன.*

*புனைதல் — உள்ளதை உயர்த்தி உரைத்தல்.*

---

*தானே முழுதுணர்ந்து தண்தமிழின் வெண்குறளால்*
*ஆறு அறம்முதலா அந்நான்கும் — ஏனோருக்(கு)*
*ஊழின் உரைத்தாற்கும் ஒள்நீர் முகிலுக்கும்*
*வாழி உல(கு) என் ஆற்றும் மற்று.*

— நக்கீரர்

---

## 113. காதல் சிறப்பு உரைத்தல்

## Expatiation on Excellence of Love

உடம்பொ(டு) உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொ(டு) எம்மிடை நட்பு — 1122

The bond of friendship which united me with this damsel is like the bond which binds body with soul.

இந்தப் பெண்ணிற்கும் எனக்கும் உள்ள நட்பு உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு போன்றதாகும்.

உரைத்தல் — பொருள் விளங்குமாறு விரித்துச் சொல்லுதல்

## 114. நாணுத் துறவு உரைத்தல்

## Narration of Abandoning Bashfulness

கடலன்ன காமம் உழந்தும் மடல்ஏருப்
பெண்ணின் பெருந்தக்க(து) இல் — 1137

None else is grand and noble like the woman who is vexed by sea like lust, yet rodes not the palm - leaf horse.

கடல் அளவு போன்ற காம வேதனை மனத்தைத் துன்புறுத்திறுலும் மைசார் அறிய நாணத்தை இழந்து மடல் எண்ணத்தை வெளிப்படுத்தாது வாழும் பெண் இனத்திற்குரிய பெருமையை வேறு எங்கும் காணமுடியாது.

நாண் — காமக்குறிப்பு நிகழும்போது புறத்தே தோன்றும்
பெண் இயல்பு.

மடல் — அக்காலத்தில் பனைமட்டையாற் செய்த குதிரையைக் குறிக்கும்; இக்காலத்தில் (காதற்) கடிதத்தைக் குறிக்கும்.

---

ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி.

---

## 115. அலர் அறிவுறுத்தல்

## Imparting the Public Clamour

அல(ர்)எழ ஆ(ர்)உயிர் நிற்கும் அதனைப்
பல(ர்)அறியார் பாக்கியத் தால் – 1141

By the rumour's rise, my precious life stands which is because of my good luck that many know this not.

பலரும் அலர் தூற்றுவதால்தான் என் அருமையான உயிர் போகாது நிலைத்து நிற்கிறது. நான் செய்த நல்வினைப்பயனால் அலர் தூற்றும் பலரும் இந்த உண்மையை அறியாதவரானார்கள்.

அலர் — விரிந்த மலர் ; வெளிப்படை
பாக்கியம் — நற்பேறு

## 116. பிரிவு ஆற்றாமை

## Unendurable Separation

இன்னா(து) இனன் இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னா(து) இனியார்ப் பிரிவு – 1158

The life in village with no kinsman for one is painfull ; a greater pain .s parting from one's sweet partner.

தன் இனத்தவர் இல்லாத ஊரில் வாழ்வது மிகவும் துன்பமாகும். அவ்வாறே இன்பத்தைக் கொடுப்பவர் பிரிந்து விடுதல் துன்பத்தைக் கொடுக்கும்.

---

பரந்த பொருள்எல்லாம் பார்அறிய வேறு
தெரிந்து திறம்தொறும் சேரச் — சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லார்ஆர் வள்ளுவர்அல் லால்.

— அரிசில் கிழார்

---

## 117. படர் மெலிந்து இரங்கல்

## Bewailing Weakly Over Affliction

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும் என்
நோனா உடம்பின் அகத்து — 1163

My soul, like shoulder's pole, within my wearied frame, sustains lust and shame.

காமமும் நாணமும் பிரிவுத் துன்பத்தைத் தாங்க முடியாத என்னுடைய உடம்பின் கண்ணே உயிரையே துலை முனையாகக் கொண்டு தொங்கிக் கொண்டிருக்கின்றன.

படர் - தலைவனின் பிரிவால் தலைவி உடலில் தோன்றும் நிறவேறுபாடு.

இரங்கல் — உள்ளம் நைந்து உருகுதல்

## 118. கண் விதுப்பு அழிதல்

## Wasting Eyes Thro' Wistful Longing

வாராக்கால் துஞ்சா; வரின்துஞ்சா; ஆயிடை
ஆரஞர் உற்றன கண் — 1179

When he comes not, no sleep; when he comes no sleep; either way my eyes have agony.

காதலர் வராதபோது எப்பொழுது வருவாரோ என்று கண் தூங்காமல் இருக்கிறது. வந்தவுடன் பிரிந்து விடுவாரோ என்று தூங்காமல் இருக்கிறது. எனவே எந்த நேரத்திலும் கண் தாங்கமுடியாத துன்பத்தினை உடையதாக இருக்கிறது.

இரவு முழுதும் அழுது,
இரண்டு கண்ணும் பழுது.

---

புலவர் திருவள் ளுவர்அன் றிப் பூமேல்
சிலவர் புலவர் எனச் செப்பல் — நிலவு
பிறங்(கு)ஒளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்(கு)இருள்மா லைக்கும் பெயர்

— செங்குன்றூர் கிழார்

---

## 119. பசப்புறு பருவரல்

## Suffering over Pallid Hue

**விளக்(கு)அற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்**
**முயக்(கு)அற்றம் பார்க்கும் பசப்பு — 1186**

As darkness waits till lamp extirguishes, the pallor waits till husband's embrace relaxes.

*ஒளி குறைந்ததும் இருள் வந்து சூழ்வதுபோல கணவர் பிரிந்ததும் பசலை (தேமல்) என்மேல் தோன்றிப் படர்கிறது.*

பசி — பசிப்பு — பசப்பு (ஒ. நோ : நடி — நடிப்பு — நடப்பு) பசப்பு — புணர்ச்சி நினைவால் தலைவிக்குத் தோன்றும் உடல் நினைவு அல்லது அரிப்பு ; உடற்பசி.

## 120. தனிப் படர் மிகுதி

## Soliloquy on Solitary Affliction

**வீழ்வாரின் இன்சொல் பெறுஅ(து) உலகத்து**
**வாழ்வாரின் வன்கணார் இல் — 1198**

No one is there of harder heart who live out their life in the world where they do not receive sweet words from their lover.

*தம்மால் விரும்பப்பட்ட காதலரின் இனிமையான சொல்லைக் கேட்டு மகிழாது உயிர்வாழ்கின்ற மகளிர் போலக் கொடியவர் இவ்வுலகத்தில் இல்லை*

பரு — படர் = பரவுதல் (spread) ; படை என்ற தோல் நோயை நோக்குக.

படர் — தலைவியின் உடலில் தோன்றும்) நிறவேறுபாடு

---

Thinkers are the fore-runners of Scientists.

---

## 121. நினைந்தவர் புலம்பல்

## Lamentation over Memories

**மாற்றுயான் என்னுளேன் மன்னோ ? அவரொடுயான்**
**உற்றநாள் உள்ள உளேன் — 1206**

How do I live yet ? I live, because of pondering the days' which I have spent with him.

*கணவரோடு கூடி வாழ்ந்த இன்பத்தை எண்ணி வாழ்வதால், அவர் பிரிந்த துன்பக் காலத்தும் உயிர் வாழ்கிறேன். அது வன்றாயின், வேறு எதனால் உயிர் வாழ்வேன் ?*

புலம்பல் — வாய்விட்டு அரற்றுதல்.

## 122. கனவு நிலை உரைத்தல்

## Narrating Dreamy Visions

**நன(வு)என ஒன்றுஇல்லை யாயின், கனவினுன்**
**காதலர் நீங்கலர் மன் — 1216**

If there were no wakefulness, my lover would never depart from my side during dreams.

*விழித்துக் கொண்டிருக்கும் நனவு நிலை இல்லாதிருக்குமானால் கனவில் வந்து கூடிய காதலர் என்னைப் பிரியாது உறுதியாக இருப்பர்.*

---

இன்பமும் துன்பமும் என்னும் இவைஇரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனம்மகிழ — அன்(பு) ஒழியா
துள்ளி உணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

— இளவேட்டனார்

---

## 123. பொழுது கண்டு இரங்கல்

## Lamenting at Sunset

**மாலையோ அல்லை ; மணந்தார் உயிருண்ணும்**
**வேலைநீ ; வாழி பொழுது ! — 1221**

Thou art not evening, but a dart that does consume the souls of married persons ; bless thee, thou eventide.

பொழுதே, நான் தலைவருடன் கூடியிருந்த பொழுது இன்பத்தைக் கொடுத்த மாலைப்பொழுது அல்ல ; மணம் முடிந்து தலைவனைப் பிரிந்த பெண்களின் உயிரை உண்ணும்படியான வேலாக மாறி வருத்துகின்றாய் ; வாழ்வாயாக !

வாழி ... இங்கு, இதற்கு 'கெடுவாயாக'' எனும்
எதிர்மறைப் பொருள் கொள்க.

## 124. உறுப்பு நலன் அழிதல்

## Loss of Beauty of Limbs

**பணைநீங்கிப் பைந்தொடி சோரும், துணைநீங்கித்**
**தொல்கவின் வாடிய தோள் — 1234**

When lover went, then faded all their wonted charms and armlets golden round slips off from these poor wasted arms.

துணைவர் பிரிந்த காரணத்தால் பழமையான அழகைப் பெற்றிருந்த தோளானது அழகிழந்து வளர்ச்சியும் இல்லாது மெலிந்ததுடன் வளையலும் தாமே கழல்கின்றன.

---

அறம் தகளி ஆன்ற பொருள்திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல்தீத் தண்டு — குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்இருள் நீக்கும் விளக்கு.

— நப்பாலத்தனார்

---

## 125. நெஞ்சொடு கிளத்தல்

## Pleading with one's own Heart

**கண்ணும் கொளச்சேறி நெஞ்சே ! இவையென்னைத்**
**தின்னும் அவர்க்காணல் உற்று — 1244**

O mind, do take these eyes also when you go to meet him ; or else, so pining for his sight these eyes would eat me too.

நெஞ்சே ! நீ மீண்டும் அவரை அடைய எண்ணினால் இக் கண்களையும் உடன் கொண்டு செல்வாயாக அன்றி நீ மட்டும் சேர்ந்தால் இந்தக் கண்கள் அவரைக் காண விரும்பி என்னைத் துன்புறுத்தும்.

கிளத்தல் — பலவாறு சொல்லுதல்.

## 126. நிறை அழிதல்

## Perish of Reserve

**காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு — 1251**

Lust's axe breaks through the door of womanly reserve barred by the bolt of bashfulness.

நாணம் என்னும் தாழ்ப்பாள் பொருந்திய நிறை என்னும் கதவானது காமம் என்னும் கோடரியால் உடைக்கப்படும்.

நிறை — மனத்திண்மை.
கணிச்சி — கோடரி.
மரத்தை வெட்டும் கோடரிபோல — அவள்
மனத்தை வெட்டும் காமக்கிளர்ச்சி.

---

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் அல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே — முப்பால்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

— கீரனார்

## 127. அவர்வயின் விதும்பல்

## Mutual Yearning for Each Other

ஒருநாள் எழுநாள்போல் செல்லும்;சேண் சென்றார்
வருநாள் வைத்(து)ஏங்குபவர்க்கு —1269

A day will pass like many long days for those who anxiously await the day of return of lords sojourning distantly.

*நீண்ட தொலைவு பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருகிற நாளை எண்ணிக் காத்துக் கொண்டிருக்கும் தலைவிக்கு ஒரு நாளானது ஏழுநாள் போல் நீண்டுகொண்டிருக்கும்.*

*விதும்பல் — விரைதல், விரும்பல்,*

*எழுநாள் — பலநாள்*

## 128. குறிப்பறிவுறுத்தல்

## Intimations Of Inward Intentions

மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வ(து)ஒன்(று) உண்டு — 1273

As through the crystal beads is seen the thread, so in her beauty gleams one thought.

*கோக்கப்பட்ட முத்தின் நடுவே அமைந்த நூலைப் போல இந்தப் பெண்ணின் அழகான உருவத்தின் உள்ளே குறிப்பு ஒன்று காணப்படுகிறது.*

---

*அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம்இன்பின்
திறன் அறிந்தேம் வீடு தெளிந்தேம் - மறன் எறிந்த
வாள்ஆர் நெடுமாற! வள்ளுவனார் தம்வாயால்
கேளா தனஎல்லாம் கேட்டு.*

—மாணிபூதனார்

---

## 129. புணர்ச்சி விதும்பல்

## Longing for Union

**உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்(கு)இல் ; காமத்திற்(கு) உண்டு — 1281**

Gladness at the thought and rejoicing at the sight belong to love and not to wine.

*நினைத்த அளவில் உள்ளம் மகிழ்தலும் பார்த்த அளவில் இன்பம் உண்டாதலும் காமத்துக்கு உண்டு. ஆனால், அந்த அளவில் வைத்து எண்ண கூடிய கள்ளுக்கு அவை இரண்டும் இல்லை.*

*கள்ளைவிடக் காமம் சிறந்தது. ஆனால், காமமும் அளவு மீறலாகாது என்பதனைக் குறள் எண் 1326 - ல் காண்க*

## 130. நெஞ்சொடு புலத்தல்

## Sulksing with one's own heart

**துன்பத்திற்(கு) யாரே துணைஆவார் ? தாம்உடைய**
**நெஞ்சம் துணைஅல் வழி — 1299**

Who will help me in my hour of grief, if my own heart comes not to my relief ?

*துன்டம் வந்த காலத்துத் தனக்குச் சொந்தமாக உள்ள நெஞ்சமே உதவியாய் இருந்து துணை செய்யாதபோது வேறு யார் தான் துணை செய்து அத்துன்பத்தைப் போக்குவது ?*

புலத்தல் - வேறுபடுதல்

---

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து — முந்திய
நல்நெறி நாம் அறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா.

— கவுணியனார்

---

## 131. புலவி

## Sulks

உப்(பு)அமைந் தற்றால் புலவி ; அதுசிறிது
மிக்(கு)அற்றால் நீள விடல் — 1302

Sulks is like the salt in food ; too long maintained is like its excess.

ஊடல் என்பது உணவில் உப்பு அளவாக அமைந்து சுவை கொடுப்பது போன்றதாம். அவ்வூடல் மிகுமானால், உணவில் உப்பு மிகுந்து சுவையைக் கெடுப்பது போன்றதாம்.

புலவி — (புல் + அவி) — தழுவுதலை உளங்கொண்டு அப்பதம் நோக்கி நிகழ்த்தும் இகல் உரையாடல்

புலவி — பிரணய கலகம் (வ)

## 132. புலவி நுணுக்கம்

## The Fineness of Sulks

' இம்மைப் பிறப்பில் பிரியலம் ' என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள் — 1315

When I did say : ' I will not leave thee in this birth — she had tearful eyes.

காதல் மிகுதியால் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேம் என்று சொன்னேனாக. அதனால் மறு பிறவியில் பிரிவேன் என்னும் குறிப்புணர்ந்து அவள் கண் நிறைய நீர்ப் பெருக்கி வருந்தினாள்.

பல பிறப்புகளில் ஒருவரோடு ஒருவர் தொடர்ந்து வரும் காதற்கேண்மை மிகச் சிறந்தது.

---

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்கும்
தெள்அமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால் — தெள் அமுதம்
உண்டறிவார் தேவ ருலகடையா உண்ணுமால்
வண் தமிழின் முப்பால் மகிழ்ந்து.

—வங்கனூர்

## 133. ஊடல் உவகை

## Joy of love Quarrel

**உணலினும் உண்ட(து) அறல்இனிது ; காமம்**
**புணர்தலின் ஊடல் இனிது — 1326**

It is sweeter to digest your food than it is to eat ; feigned dissent is much sweeter than union for the love.

உடலுக்கு மேலும் மேலும் உண்பதைவிட உண்ட உணவு நன்றாகச் செரிப்பது இன்பமாக இருக்கும். அதுபோலக் காமத்துக்குக் கூடிமகிழ்வதை விட ஊடல் கொண்டு பின் கூடுவது மிகுதியும் இன்பம் பயக்கும்.

ஊடல் - கூடலை உளங்கொண்டு உவகையோடு நிகழ்த்தும் சிணுங்கலும், பிணங்கலும்.

---

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் - (குறள் :50)

— என்ற குறளின் முழு விரிவும் விளக்கமுமே ஏனைய 1329 குறள்களும்.

---



We judge ourselves by what we feel capable of doing, while others judge us by what we have already done — Longfellow.

நம்மால் என்ன செய்ய இயலும் எனக் கருதுகிறோமோ அதை வைத்து நாம் நம்மை மதிப்பிடுகிறோம். அதே நேரத்தில், நாம் முன்னரே என்ன செய்து வைத்து இருக்கிறோம் என்பதைக் கொண்டு நம்மை மற்றவர்கள் மதிப்பிடுகிறார்கள்.

— இலாங்பெலோ (மாமனிதர்)

# பிழைத் திருத்தப் பட்டியல் : ERRATA

பிழைகளைத் திருத்திக்கொண்டு, பிறகு படிக்கவும்.

Please correct the errors and then read.

| பக்கம்<br>Page | வரி<br>Line | பிழை<br>Error | திருத்தம்<br>Correction |
|---|---|---|---|
| 2 | 14 | grea *l* | great |
| 4 | 1 | வாழ்க்கை | வாழ்க்கைத் |
| 4 | 20 | maste piece | master-piece |
| 6 | 21 | p sent | present |
| 8 | 5 | These | Those |
| 8 | 12 | famicy | family |
| 13 | 15 | உடமை | உடைமை |
| 15 | 6 | enlraping | entrapping |
| 17 | 5 | the abstain | to abstain |
| 17 | 19 | வ ழ்க்கை | வாழ்க்கை |
| 26 | 19 | exceprt | except |
| 27 | 4 | மிக்க | மிக்கக் |
| 29 | 12 | அடுத்தப் | அழுத்தப் |
| 30 | 6 | scptre | sceptre |
| 31 | 18 | unshakeble | unshakable |
| 33 | 3 | பசடு | பகடு |
| 33 | 18 | efford | effort |
| 38 | 18 | discase | disease |
| 38 | 26 | உள்ளுவறோ | உள்ளுவோர |
| 39 | 20 | பொருளினிம் | பொருளினும் |
| 40 | 12 | fride | Pride |
| 41 | 3 | ே ாலும் | போலும் |
| 43 | 15 | slamlessness | shamlessness |

| | | | |
|---|---|---|---|
| 46 | 18 | கெள்வாரானால் | கொள்வாரானால் |
| 48 | 6 | examplory | examplary |
| 53 | 6 | aud | and |
| 53 | 17 | plough | plough |
| 54 | 19 | இன்பதத்தை | இன்பத்தை |
| 55 | 5 | theirs | their |
| 56 | 1 | onLove | On Love |
| 56 | 6 | glace | glance |
| 58 | 15 | rodes | rides |
| 59 | 17 | ıs | is |
| 59 | 20 | கெ டுக்கும் | கொடுக்கும் |
| 61 | 11 | அ \| ப்பு | அரிப்பு |
| 61 | 21 | ப:வுதல் | பரவுதல் |
| 64 | 26 | மெய்ப்-ால | மெய்ப்பால |

நூல் முகப்பிலிருந்து

| | | | |
|---|---|---|---|
| 2 | 19 | வெ_ளியீடு | வெளியீடு |
| 3 | 22 | வலம் \| ரி | வலம்புரி |
| 7 | 15 | subtilty | subtlety |
| 7 | 35 | f aith | faith |



---

**குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்**
**கற்றறிந்த மாந்தர் கடன்.**

Weeding out errors and inserting the essential omission
While reading are the duties of the learned wisemen.

ஆயிரத்து முந்நூற்று முப்ப(து) அருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் — போய்ஒருத்தர்
வாய்கேட்க நூல்உளவோ ? மன்னு தமிழ்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம் — நத்தத்தனார்

When couplets thirteen hundred and thirty rare
Are learnt succint in resplendent lore
Then teacher is there one to sit under anymore
Master be your own on throne for ever sure
— Nathathanar




எல்லாப் பொருளும் இதன்பால் உளஇதன்பால்
இல்லாத எப்பொருளும இல்லையால் — சொல்லால்
பரந்தபா வால்என் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை — [திருவள்ளுவமாலை - 29]

All knowledge benefic does this sure encompass
For nought a thing there is this does ever pass
What good is verse verbose grand profuse
To words avail but Valluvar's hearts effuse.
— Garland of Thiruvalluvar - 29




## திருக்குறள் பேரவை, தஞ்சை.

# நெஞ்சில் நிறுத்துங்கள்!

**திருவள்ளுவர் –**

**உலகப் பேரறிஞர்**

**திருக்குறள் –**

**உலகப் பொது நூல்**

**திருக்குறள் –**

**வாழ்வு இயல் நூல்**

குறள் நெறி நின்று வாழ்ந்தால்
குன்றாப் புகழோடு உயரலாம்!

திருக்குறளே நம் மறை! தீந்தமிழே எம் இறை!

ஒப்பிலா இப்பேரவையில்
பேராளராகிப் பெருமை பெறுங்கள்!

தவத்திரு.
**குன்றக்குடி அடிகளார்**
மாநிலத் தலைவர், குன்றக்குடி.

பெரும்புலவர்.
**மொ. பழநிமாணிக்கம்**
செயலர், தஞ்சை.

ஜெமினி அச்சகம், மேலராஜவீதி, தஞ்சாவூர் - 613 009.